# பரிபூரண அழகு பராமரிப்பு—

## எவ்வேளையிலும் எங்குமே

க்ரூக்ஸ் லாக்டோ-காலமைன் துணையுடன். கோல்ட் க்ரீமாக உபயோகியுங்கள்.

ஏனெனில், லாக்டோ-காலமைன ஒரு உயர்ந்த கோல்ட க்ரீம் போலவே, உங்கள் சருமத்தை சுத்திகரித்து, இயற்கையான ஈரத் தன்மையை அளிக்கிறது. சருமம் வறட்சியடையாமல், மிருதுவாக வும் மென்மையாகவும் இருக்க உதவுகிறது.

ஆனால்... இதுமட்டுமல்ல... காலமைன் மற்றும் விட்ச்ஹேஸல் சேர்ந் திருப்பதினால், லாக்டோ-காலமைன் உங்கள் சருமத்தை இதமாக பேணி அழகூட்டுகிறது... மேலும் இரவு, பகல்-எந்நேரத்திற்கும் உகந்த மேக்-அப் சாதனமான லாக்டோ-காலமைன் ஒப்பனையின் 'அடிப்படை' யாக விளங்குகிறது.

உங்கள் முக எழிலுக்கு உண்மையில் லாக்டோ-காலமைன் தவிர வேறு எதுவுமே வேண்டாம்.

**க்ரூக்ஸ் லாக்டோ-காலமைன்**

மாசில்லா அழகுக்கு!



க்ரூக்ஸ் இண்டர்ப்ரான் லிமிடெட், பம்பாய்-25.

TAM

இப்பொழுது சிறிய சைஸ்களிலும் கிடைக்கிறது.

·சென்னை குளோப்·பிராட்வே

மஹாலக்ஷ்மி · ஜெயராஜ் மற்றும் தென்னிடங்கும்



அமர்ஜோதி மூவீஸ்

# குல விளக்கு

திரைக்கதை, வசனம்·டைரக்ஷன் :

**K.S.கோபாலகிருஷ்ணன்**

இசை :
K.V.மஹாதேவன்

தயாரிப்பு:
K.S.சபரிநாதன்

ஸ்டூடியோ :
கற்பகம்





# விண்வெளிப் போட்டி!




காங்கிரஸ் அரசாங்கம்

PK

பார்க்க மறுப்பது
பரிகாரம் ஆகுமா?

# கல்கி பொருளடக்கம்

சௌமிய, ஆனி 22உ ○ 1969 ஜூலை 6உ



அட்டைப் படம் : ஆர். உதயபாஸ்கர்

''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

மலர் 28 ✻ இதழ் 49



# தெலிங்கானாக் குழப்பம்

தெலிங்கானா கிளர்ச்சியின் போக்கு கவலை தருவதாக இருக்கிறது. தும்பை விட்டு வாலைப் பிடிக்கும் வகையில் காரியங்கள் நடக்கின்றன. அதிருப்தி கட்டுப்பாடாக வெளி வந்த உடனேயே அதாவது குறைந்தது நாலாறு மாதங்களுக்கு முன்னரே, சம்பந்தப்பட்ட எல்லோரையும் ஒன்று கூட்டிப் பேசியிருந்தால், சுமுகமான முடிவு ஏற்பட்டிருக்கலாம். செய்ய வேண்டியதை உரிய காலத்தில் செய்யத் தவறியதால் அதிருப்தி மலை போல் வளர்ந்து விட்டது. பலாத்காரச் செயல்களும் சேர்ந்து கொண்டு எல்லா விதங்களிலும் கஷ்டமான ஒரு நிலைமையைத் தோற்றுவித்துள்ளன.

பிரதம மந்திரியும், மற்ற காங்கிரஸ் தலைவர்களும் மேற்கொண்ட முயற்சிகள் எல்லாமே பயனற்றுப் போய் விட்டன. பிரதம மந்திரியும், மந்திரி சவானும் ஹைதராபாத்துக்கு நேரில் சென்று பேசினர். தனித் தெலிங்கானாத் தலைவர்கள் தமது கோரிக்கையைக் கைவிட மறுத்து விட்டனர். அதையடுத்துக் காங்கிரஸ் ஸ்தாபனத்தின் தலைவர் நிஜலிங்கப்பா காரியக் கமிட்டியைக் கூட்டிப் பேசினார். கிளர்ச்சித் தலைவர்களில் முக்கியமான சென்னா ரெட்டியும், கொண்டா லக்ஷ்மண் பாபுஜியும் தில்லியில் நடத்திய பேச்சின் விளைவாக இரண்டு விஷயங்கள் தெளிவுபட்டன. தெலிங்கானாக் கோரிக்கையை அவர்கள் கைவிட்டால் ஆந்திரா முதலமைச்சர் பதவியை பிரம்மானந்தரெட்டி கைவிடுவார் என்று கூறப்பட்டது. அதையடுத்து ஒரு தெலிங்கானாக்காரர் முதல் மந்திரியாக வரலாம், அமைதியான சூழ்நிலையில் மற்றப் பிரச்னைகளைக் கவனித்து முடிவு செய்யலாம் என்று காரியக் கமிட்டி சார்பில் கூறப்பட்டது. பிரம்மானந்த ரெட்டி விலகுவதால் மட்டும் நிலைமையைச் சீர்ப்படுத்த முடியாதென்று தெலிங்கானாத் தலைவர்கள் கூறினர். ராஷ்டிரபதியின் ஆட்சி ஏற்பட வேண்டும், அதன் கீழ் தான் அமைதி மீண்டும் ஏற்பட முடியும், பிரச்னைகள் சரிவரத் தீர்வதற்கு வழி பிறக்கும் என்ற நம்பிக்கையும் உதயமாகும் என்று தெலிங்கானாத் தலைவர்கள் வற்புறுத்திக் கூறினார்கள். ஆனால் அவர்களுடைய யோசனையைக் காங்கிரஸ் மேலிடத்தார் ஏற்கவில்லை. ராஷ்டிரபதி ஆட்சிக்கு அவர்கள் தயாராயில்லை. தனித் தெலிங்கானாவும் கிடையாது என்று கூறிவிட்டனர்.

ஆந்திரப் பிரதேசத்தின் தலைநகருக்குத் திரும்பிய உடனேயே சென்னா ரெட்டி, கொண்டா லக்ஷ்மண் பாபுஜி உட்பட ஏராளமான தெலிங்கானாத் தலைவர்களைத் தடுப்புக் காவல் சட்டத்தின் கீழ் கைது செய்து சிறை வைத்து விட்டார்கள். தெலிங்கானாவெங்கும் கிளர்ச்சி நடத்துமாறு அவர்கள் திட்டமிட்டதன் விளைவாக இந்த நடவடிக்கை மேற்கொள்ளப் பட்டது. நடவடிக்கை எடுத்தது சரி என்று வாதாட முடியும். ஆனால் வாதப் பிரதி வாதங்களுக்கு இது சமயமன்று. ஏற்கனவே காலம் வீணாகி விட்டிருக்கிறது.

அரசாங்க நடவடிக்கைகளின் விளைவாக மக்களின் உணர்ச்சி வேகம் அதிகப்படுகிறது. எனவே கஷ்டங்கள் அதிகரித்துக் கொண்டுதான் போகும்.

அரசாங்கங்கள் பலாத்காரத்துக்குப் பணிந்து கொடுக்கலாகாது என்பது நல்ல கோட்பாடுதான். ஆனால் மதிப்புக் கொடுத்தாக வேண்டிய பிற கோட்பாடுகளும் உண்டு. மக்களின் கோபத்தை வளர்க்கக்கூடிய எதையும் செய்யலாகாது. எது சரியோ அதைக் கூடிய சீக்கிரத்தில் செய்தாக வேண்டும் என்பது அரசாங்கம் கடைப்பிடிக்க வேண்டிய உயர்ந்த கோட்பாடு.

# ராஜாஜியின் கருத்துக்கள்

மக்களின் க்ஷேம நலனே சோஷலிஸத்தின் லட்சியம். ஏழைகளை மேம்படுத்துவது அதில் மிக முக்கியமான அம்சம். க்ஷேம நலன்களை அடைவதற்கு சோஷலிஸம் வழி முறையாக மதிக்கப்படுகிறது. சுதந்திரக் கட்சியின் லட்சியமும் சோஷலிஸ்ட் இலக்கைப் போன்றதே. ஆனால் அது கைகூடச் செய்வதற்கு முதலில் தேசத்தின் செல்வத்தைப் பெருக்க வேண்டும் என்று சுதந்திரக் கட்சி கூறுகிறது. ஆனால் சோஷலிஸ்ட் வழி என்று சொல்லப்படுவது செல்வத்தைப் பெருக்காது; அது சுருங்குவதற்குத்தான் பயன்படும். சுதந்திரக் கட்சியின் கோட்பாடுகள் சரியானவை என்பதை ஜப்பானும், ஜர்மனியும் செயலில் காட்டியுள்ளன. பர்மிட்டுகள், லைசென்சுகள் போன்ற அரசாங்கச் சலுகைகள் மூலம் பொறுக்கி எடுத்த ஒருசிலரைப் பணக்காரர்களாக்குவது முதலாளித்துவம் அல்ல, சோஷலிசமும் அல்ல. அது நடு மைய வழியும் ஆகாது. ஏக போகங்களைச் சிருஷ்டிக்கும் வழியே அது. பண்டங்களை வாங்கி உபயோகிப்போரின் துயரம் அதனால் அதிகமாகிறது.

இவ்வளவு குழப்பத்திற்குப் பிறகாவது சர்க்கார் செய்தாக வேண்டிய காரியம் ஒன்று உண்டு. தகுதியும், நாணயமும் உள்ளவர்களைக் கொண்டதும், சுதந்திரமாகப் பணியாற்றுவதற்கு அதிகாரம் உள்ளதுமான ஒரு குழுவை நியமித்து லைசென்ஸ், பெர்மிட் நிர்வாகத்தைப் பற்றிய அதிகாரமனைத்தையும் அதற்கு மாற்ற வேண்டும்.

நிர்ப்பந்தமற்ற தொழில் முயற்சியும், போட்டா போட்டியும் சுதந்திரக் கட்சியின் கோட்பாடுகள். தரமான சரக்கு, தேவைக்கு ஏற்பக் கிடைக்கச் செய்கின்ற நிலைமையை அவை உறுதி செய்யும். சென்ற பதினைந்து ஆண்டுகளில் இந்தியாவின் கொள்கை இவ்வாறு இருந்திருக்குமானால், இதற்குள் சோஷலிஸ்ட் வழி மூலம் அடையக் கூடிய இலக்கை இதற்குள் தேசம் அடைந்திருக்க முடியும். முதலில் உற்பத்திப் பெருக்கம் தார்மிக, ஆன்மிக நியதிகளுக்கு ஏற்ப நடைபெறச் செய்வதே குறிக்கோளாக இருக்க வேண்டும். தகராறுகளுக்குத் தூபமிட்டு, உற்பத்தியைக் குறைக்கின்ற கோஷங்களைக் கைவிட வேண்டும். அவை தவறானவை, பயனற்றவை என்பது ருசுவாகிவிட்டது.

★

சென்னை ரோட்டரி கிளப்பில் திரு எஸ். கே. பாட்டீல் சென்ற 24ந் தேதி யன்று நிகழ்த்திய உரை, என்னை அழைத்திருந்தால் எப்படிப் பேசியிருப்பேனோ அப்படி இருந்தது. சொல்லப்படும்' கருத்துக்களுக்கு ஏற்பச் செய்கை இருக்க வேண்டியதில்லை என்ற சம்பிரதாயம் ஏற்பட்டு விட்டபின் நல்ல பிரசங்கங்கள் செய்துதான் என்ன பயன்? ஸ்ரீ பாட்டீல் சுதந்திரக் கட்சியின் தலைமை ஏற்க வேண்டும். இல்லையேல், தம் மனத்தில் தோன்றியதைக் கூறாமல் மௌனமாகவாவது இருக்க வேண்டும்!

★

புஷ்பங்களை அலங்கரிப்பதில் ஜப்பானியரின் தனியான முறையை இந்தியப் பிரதமருக்குக் கற்றுக் கொடுப்பதாகப் படங்களும் செய்திகளும் படிக்க இனிமையாக இருக்கிறது. ஆனால் தெலுங்கானாவிலிருந்து வரும் செய்திகள் மேலும் மேலும் துயரமூட்டுவனவாக இருக்கின்றன. நேப்பாளத்தில் நிறுவப்பட்டுள்ள இந்திய ராணுவத்தைப் பற்றி நேப்பாளம் விடுக்கும் கோரிக்கை உற்சாகமளிப்பதாக இல்லை. ஸ்டேட் பாங்கில் தொடர்ந்து நிலவும் கஷ்டங்களைப் பற்றி நினைக்க இனிமையாக இல்லை.









சென்னை ஜில்லா சுதந்திரக் கட்சியின் அரசியல் மகாநாடு தியாகராயநகர் வங்காள அசோஸியேஷன் ஹாலில் ஸ்ரீ பிலுமோடி அவர்கள் தொடங்கிவைக்கச் சிறப்பாக நடந்தது. 1. ராஜாஜி அவர்களின் திருவுருவப் படத்தை வி. வி. தோராய் அவர்கள் திறந்து வைத்தார். 2. தோராய் அவர்களை ஸ்ரீகுமார் வரவேற்கிறார். 3. சென்னை கோகலே ஹாலில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் ராஜாஜி அவர்களும் திரு எம். ஆர். மஸானியும் உரையாற்றுகின்றனர். 4. சுதந்திரா மகாநாட்டில் முன்னாள் நீதிபதி சோமசுந்தரம். 5. சாரதா பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் நடைபெற்ற கூட்டத்தில் தலைவர் என். ஜி. ரங்கா. 6. அதே கூட்டத்தில் ராஜாஜி பேசுகிறார்.





# ஷண்மத தெய்வ வழிபாடு

காஞ்சிபுரம் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்

அண்மையில் சென்னையில் ஷண்மத மாநாடு நவதினங்களில் நவீன ரீதியில் புராதன சம்பிரதாயம் வழுவாமல் உயரிய தலைமைகளில் அறிஞர் சொற்பொழிவுகள் முதலியவற்றோடு, எங்கும் என்றும் நடவாத சிறப்போடு உலகறிய நடைபெற்றது.

அஃது அவசியமா? இக் கேள்வி வைதீகாசாரம் உடையவர்களை நோக்கின் எழக் கூடியதே. இக்காலத்தில் மிக்க நாஸ்திகர்களையும் ஆஸ்திகருள்ளும் பேத புத்திமான்களையும் நோக்கின் இந்தக் கேள்வி அநாவசியமேயாகும்.

ஷண்மதம் எனினும் அறுசமயம் எனினும் ஒன்றே. 'அறுசமயம்' எனப்படுவன பல இருக்கின்றன. சமயங்களுக்குள் ஆறாறாக நால் வகை உண்டு. அவற்றுள் வைதிகம் அல்லாதனவும் வைதிகமும் அடங்கும். அத்தொகுப்புக்குள் இந்த ஷண்மதம் இல்லை. ஆயினும் ஷண்மத தேவதைகளை வழிபடும் வழக்கமுடைய சமயங்கள் அவற்றுள் அடங்குவனவே.

சமயம் எல்லாவற்றையும் கடந்தது சமயாதீதம். அச்சமயாதீதப் பரம்பொருள் பரமசிவம். இப்பெயரைக் கேட்டவுடன் சைவம் என்னும் ஒரு நிறச் சமயத்தின் தெய்வத்தையே உணர்த்துவதாக நினைப்பர் பலரும். அந்நினைப்பு சமய ஞானம் முறையாகப் பெறாத குறைவைக் காரணமாகக் கொண்டது. **'சைவ சித்தாந்தம்'** எனப்படுவது முற்குறித்த நால்வேறு அறுவகைச் சமயங்களுள் ஒன்று அன்று. இவ்வுண்மையை உமாபதி சிவம் அருளிய 'சங்கற்ப நிராகரணம்' உணர்த்தப்பெறும் அறிவுடையார்க்கு எளிதின் அறிய இயலும். இச்சமயாதீதமாகிய பரமசிவம் வேதாகம முடிபாக உணர்த்தப் பெறும் பரப்பிரம்மம் அன்றி மற்றில்லை. அப்பரமசிவத்தைத் தனது முடிபாகக் கொண்டதும், **'சைவம்'** என்ற பெயரால் அறிவிக்கப்படுகின்றது. சமயாதீதம் ஆயினும் அதை ஒரு சொல்லால் அறிவித்துத்தானே புலப்படுத்த வேண்டும்? அதை அறிவிக்கும் சொல் ஏதுவாயினும் அது அச்சமயாதீதப் பொருளை உணர்த்துவது என்பது அறிதே. அதனால் தாயுமானவர் "சைவம் முதலாம் அளவில்(லாச்) சமயமும் வகுத்து, **சமயங் கடந்த மோன சமரசம்** வகுத்த நீ, உன்னை யான் அணுகவும் தண்ணருள் வகுக்க இலையோ" என்று அப் பொருளை நோக்கி வினவியருளினார். சமயாதீதம் (சமயம் கடந்தது) மௌனம் சமரசம் என்னும் மூன்றினுள் உள்ள நன்மையைச் சிந்திக்கவேண்டும். இச்சமயாதீதப் பொருளைத்தான் அத்வைத சாஸ்திரங்கள் **'பரப்பிரும்ம வஸ்து'** என்று குறிக்கின்றன. அவ்வட சொற் பெயர்ப் பொருளைத் தமிழில் வெவ்வேறு சொற்றொடர்களாகக் குறித்தார்கள். அப்பர் சுவாமிகள், "மிக்க பெரும் பொருளைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே" என்று பாடியருளியதில் பரப்பிரும்ம வஸ்து என்றதை **'மிக்க பெரும் பொருள்'** என்று குறித்த வாய்மை அறியத்தக்கது. பரம் — மிக்கது. அபரம் — குறைந்தது. பிரமம் — பெரியது. வஸ்து — பொருள். தாயுமானவர் மற்றொரு பாடலில் ஜகத்தவரைச் சேர வருக என்று அழைக்குமிடத்திலும் **'சமயாதீதப் பழம் பொருள்'** என்று குறித்ததை எல்லாரும் அறிவர். அப்பொருளை அறிவிக்கும் பொருட்டுத் திருக் கோயில்கள் இன்றும் விளங்குகின்றன. அவ்விளக்கம் ஒன்றே ஷண்மத தெய்வங்களைக் குறித்த பேத புத்தியை நீக்கி அபேத ஞானத்தை வளர்க்க உதவும்.

சிவாலயத்தில் அச்சமயாதீதப் பழம் பொருளைச் சிவபெருமானது உச்சியில் பாவிக்க வைத்திருக்கிறது ஆகமம். சிவலிங்கத்தையும் பெருமான் என்பர். அச்சிவலிங்கப் பெருமானது உச்சியில் அப் பழம் பொருளாகிய சிவபெரும் பொருளைப் பாவித்து வணங்குவதே சத்திய ஞானயாகம். மற்றைய திருவுருவங்கள் சமயம் சமயாதீதம் இரண்டுக்கும் உரியவை. ஞானிகள் அவற்றிலேயும் சமயாதீதப் பொருளையே வழிபடுவார்கள். ஏனையோர் அப்படி வழிபடும் ஞானானுபவம் அடையும் வரையில் சமயக் கடவுளாகவே வழிபடுவர்.

சிவாலயம் ஷண்மத தெய்வங்களுக்கும் பொதுவாகும்.

## கணபதி (காணபத்தியம்)

சிவாலயத்திலே முதல் வழிபாடு கணபதிக்கே உள்ளது. கணபதியைப் பல இடத்தில் வழிபடச் செய்திருக்கும் முன்னோர் கருணையை ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

**'மர்றை, வழி, கோயில், குளமும் குலவு கும்பிமுகன்'** என்று குமரேச சதகம் அறிவிக்கும் இடங்கள் மட்டுமா? கோவையிலும் வேறு சிற்சில ஊர்களிலும் வீடுகளிலும் பிள்ளையார்க்குத் தனியாகச் சிறு கோயில் நிறுவி வழிபடுதலை நேரிற் கண்டிருக்கிறோம்.

கணபதி கோயில் இல்லாத சிவாலயம் எங்கும் இல்லை. ஆகமத்தில் ஆன்மார்த்த பூஜைக்கும் பரார்த்த பூஜைக்கும் கணபதி பூஜையைச் செய்ய விதித்திருக்கின்றது.

ஆறாதார தியானத்தில் முதலா (மூலா) தாரத்திலே கணபதி தியானம் செய்யாதவர் யோக சித்தியைப் பெறார்.

தொடக்கத்திற் பிள்ளையார் சுழியின்றி எதையும் எழுதாத மக்கள் இன்றும் கோடிக் கணக்கில் வாழ்கின்றனர்.

சைவர்களில், கணபதிக்குரிய திருப் பெயர்களை வைத்து அழைக்கப்படுவோர்க்கு அளவில்லை.

கணபதியை வணங்காமல் அக்ஷராப்பியாசாரம்பம் எப்பொழுதும் இந்நாட்டில்










## ராமர் தினம்

1. ராம தினத்துக்குத் தலைமை தாங்கினார் பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராசாரிய ஸ்வாமி. இடது கோடியில்: ஸ்ரீ ஏ. வி. போஸ். 2. உபந்நியாசம் வழங்கிய ஸ்ரீ கோமல் சேஷாத்திரி அய்யங்கார். 3. உணர்ச்சிவசத்துடன் சா. கணேசன் அவர்கள். 4. முக்கூர் ஸ்ரீநிவாச வரதாச்சாரியார், டாக்டர் எஸ்.கே. நாயர், பேராசிரியர் எஸ். ராமநாதன். 5, 6, இரு நாட்கள் உரையாற்றிய திரு ம. பொ. சி., டாக்டர் நாகராஜராவ். 7. ஸஜ்ஜன்காட் மடம் உப தலைவர் அன்னபுவா ராமதாஸி. ★

























1. அன்னதானம் நடக்கிறது.

2. ஸ்ரீ கிருஷ்ண தினத்தில் எழுந்தருளிய ஸ்ரீ பண்டர்கரே ஸ்வாமிகள்.

3. ஸ்ரீ கிருஷ்ண தினத்தில் டாக்டர் தெ. பொ. மீ., ஸ்ரீ அஞ்சம் மாதவன் நம்பூதிரி, டாக்டர் கோவிந்த கோபால முகோபாத்தியாயர்.

4. 'சங்கரர்-ஷண்மத' சிறப்பு மலரை, விழாவின் ஜீவநாடியாக விளங்கிய ஸ்ரீ எஸ். ஜி. ரத்தினம் அய்யருக்கு வழங்குகிறார் ஸ்ரீ கே. பாலஸுப்பிரமணிய அய்யர்.

5. பூர்த்தி தினத்தில் ராஜாஜி.

6. சிறப்பு மலரை, மாநாட்டுக் குழுத் தலைவர் ஸ்ரீ பக்தவத்ஸலத்தின் சார்பில் அவரது புதல்வி ஸ்ரீமதி சரோஜினி வரதப்பன் பெற்றுக் கொள்கிறார்.












1. ஸ்ரீ ராமலிங்க ரெட்டியார்.

2. ஸ்ரீ கே. பாலசுப்ரமணிய அய்யர். (நன்றி நவிலல்)

3. ஸ்ரீமதி மோனிகா வர்மா.

4, 6. விழாவைப் பூர்த்தி செய்தது ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாகவதரின் பஜனை.

5. 'ஆலயங்களுக்கு அளிக்கும் நன்கொடைகளுக்கு வருமான வரியிலிருந்து விலக்குத் தர வேண்டும்' என்று பிரேரிக்கிறார் மாநாட்டின் ஒரு முக்கிய போஷகரான ஸ்ரீ வைத்ய சுப்ரமணிய அய்யர். ( தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.)






இல்லே. புழுத்துக் கெடும் சாணமும் பின்னே யார் பாவனையை அடைந்த பின் புழுத்துக் கெடுவதில்லே. இதை அறிந்து பிற சமயத் தாரும் கணபதியை வழிபடுகின்றனர்.

வட நாட்டில் இத் தெய்வ வழிபாட்டின் மிகுதியைக் குறித்து நம் நாட்டில் நன்கு விளக்கினுர் ஒரு நாள் அவைத் தலைவர். நம் நாட்டில் கணபதி கோயில் தனியாக இருப்ப வைக்கு அளவில்லே. ஒரே ஊரில் பலப்பல கோயில்கள் உள்ளன. அப்படி வேறு தெய் வங்கட்கு இல்லே.

## குமாரஸ்வாமி (கௌமாரம்)

சிவாலயத்தில் முருகக் கடவுள் உள்ளே நுழைவாயிலின் இடப்பாலும் சிவ மூல ஸ்தானத்துக்கு மேற்கும் வாயு மூலேயும் இடமாகக் கோயில் கொண்டு வரங் கொடுத் தருள்கின்ருர். குறிஞ்சி (மலேநில)க் கடவுள் எனப் போற்றப்பட்டாலும் ஏனைய நிலங் களிலும் அவர் கோயில் உண்டு. தனிக் கோயில்கள் குமாரக் கடவுளுக்கு நாடு முழுவதும் பல உள்ளன. கௌமார மதம் எனத் தனியாகக் கழித்து விடவில்லே. சைவத்தின் முக்கிய தெய்வமாகப் போற்றப் பெறும் சிறப்பு முருகனுக்கு உண்டு. தென் நாட்டில் எல்லா மதத்தாரும் முருகனே வழிபடுகிருர்கள். இப்பொது வழிபாட்டை நம் ஷண்மத மாநாடு மேலும் நிலேபெறச் செய்யும் என்பது உறுதி.

## திருமால் (வைணவம்)

சிவாலயத்திலேயும் திருமால் வழிபாடு உண்டா எனக் கேட்பவர் நம் நாட்டில் எவரும் இரார். விஷ்ணு கோயிலிலும் சிவனே வழிபடுவதுண்டா என்று கேட்டால் வியப்பில்லே. பரம சைவனும் தன் ஆன் மார்த்த பூஜையில் விஷ்ணுவையும் வழி படுகின்ருன். ஆகம விதியும் அதை வற்புறுத் துகின்றது. சிவ பூஜா விதியில் விஷ்ணுவை வழிபடச் சொல்வதை எல்லோரும் அறிவர். அறிவதும் அன்றிச் சிவபூஜை செய்வோர் ஒழுங்குடன் செய்து வருவாராயின், விஷ் ணுவைப் பூஜித்த பின்பே சிவனேப் பூஜிப் பர். பெரிய ஸ்தலங்களில் மிக்க பிரசித்தி வாய்ந்த திருக் கோயில்களில் விஷ்ணு மூர்த்தியை வழிபட்டு வரும் பழக்கம் இன் றும் உண்டு. என்றும் இருக்கும்.

## சூரியன் (சௌரம்)

பரார்த்த சிவாலயத்திலும் ஆன்மார்த்த சிவபூஜையிலும் சூரிய பூஜை என்றும் உண்டு. எங்கும் உண்டு. இது பல மதத்தா ருக்கும் உரிய பொது வழிபாடு. 'பலர் புகழ் ஞாயிறு' என்ற நக்கீரர்வாக்கும் அதற்கு நச்சி னுர்க்கினியர் கூறிய விளக்கமும் நாடறியும்.

## தேவி (சக்தி வழிபாடு) - சாக்தம்

சிவாலயத்திலும், ஆன்மார்த்த பூஜை யிலும் அம்மன் வழிபாடு ஆகம விதிப்படி நடைபெறுகின்றது. வழிபாட்டில் வேற் றுமை உண்டு. தேவியை வழிபடலாகாது என்று மறுப்பதில்லே. வழிபடும் மார்க் கத்தை மறுப்பது உண்டு. வாம மார்க்கம், தக்ஷிண மார்க்கம் இரண்டில் முன் மார்க் கமே மறுக்கப்படுகின்றது. சைவாகம விதிப் படி நடக்கும் சக்தி வழிபாட்டை எல்லாரும் எப்போதும் இசைந்து செய்து வருகின்றனர்.

இந்து மக்கள் எல்லோரும் வைதிக மார்க் கத்தில் ஈடுபட்டுத் தெய்வ வழிபாட்டை மறவாதவர்களாய்ச் செய்து ஆத்ம லாபம் பெற வேண்டும். இதற்குப் பேதம் இன்றிச் சம சிந்தனேயும் சாந்தியும் வளர்த்துக் கொள்ளும் வகையில் முற்குறித்த கணபதி முருகன், திருமால், தேவி, சூரியன், சிவன் என்னும் ஆறையும் வழிபட்டு, மத பேதம் அறவொழி, நாட்டில் சமய ஒற்றுமையை வளர்த்து வருவது என்றும் நம் நாட்டை அதிக க்ஷேமமாக வைத்துக் காத்து வரும் சிறந்த வழியாகும். இஃது எல்லா நாடுகளும் நம் நாட்டை மிகப் போற்றி வரும் பெரு மையை உண்டாக்கும்.

வளர்க ஷண்மத சமரச பாவம்!



### ஆசாரியர் அருள்வாக்கு

ஹரியே! இறுதியில் நமக்கிடையே பேதமே இல்லாமல் ஒன்றிவிடுவது உண்மை. எனினும், இந்த ஐக்கியம் ஏற்படும் வரையில் நீயே பிரபு; நான் உன் செல்வம். நான் உன்னவன்; நீ என்னவன் அல்ல. உண்மையில் கடலும் அலேயும் ஒன்றேதான். எனினும் அலேயா கக் காண்கிற வரையில், அலேதான் கடலு டையதே அன்றி, கடல் அலேயுடைய தல்லவே!

# வேதாரண்ய வீரர்கள்



உப்புப் போரின்போது தொண்டர்களில் ஒருவராகவும் விளம்பர அதிகாரியாகவும் இருந்த ஸ்ரீ டி. ஆர். பத்மநாபன் அவ்வப்போது விரிவான குறிப்புக்கள் எடுத்து வந்தார். 'வேதாரண்யம்' என்ற தலைப்பில் நூல் வடிவில் இக் குறிப்புக்கள் பிரசுரமாகி யிருக்கின்றன. இந்த நூலிலிருந்து சில பகுதிகளைக் கீழே தருகிறோம்.

**ம**துவிலக்குப் பிரசங்கத்தைக் கேட்டிருந்த கூட்டத்தில் அங்கொருவன் எழுந்து ராஜாஜியோடு தர்க்கம் பண்ண ஆரம்பித்தான்.

தலைவருக்கு இந்த எதிர்ப்பு, ஜனங்களுக்கு விஷயத்தை இன்னும் விளக்கமாய் எடுத்துச் சொல்லச் சாதகமாயிற்று! அவர் ஜனங்களைப் பார்த்து, ''பார்த்தீர்களா, சகோதரர்களே! நீங்கள் குடித்து உங்கள் கைப் பணத்தை யெல்லாம் செலவு செய்தால் அதனால் இந்தக் கண்டிராக்டரும் இவனுக்குக் கடை வைக்க லைசென்ஸ் கொடுத்திருக்கும் சர்க்காரும் பிரயோஜனம் அடைகிறார்கள். அதற்காகத்தான் இந்தக் கடைக்காரர் குடியாதேயுங்கள் என்று உங்களுக்குப் புத்தி மதி சொல்ல வந்தால் அது தனக்கு இடையூறாக இருக்கிறது என்று கூசாமல் வாய் விட்டுச் சொல்லுகிறார். நீங்கள் எல்லோரும் குடியை இன்றே விட்டு விட்டீர்களானால் உங்கள் கைப்பணம் உங்களிடத்திலேயே இருக்கும். ஒவ்வொருவரும் சுகமாக நிலங் காணி, நகை நாணயம், மாடு கன்று, வீடு வாசல் வைத்துக்கொண்டு வாழலாமே!'' என்று இந்த விதமாக விஷயங்களை ஜனங்களுக்கு எடுத்துச் சொன்னார்.

**கூ**ட்டத்தில் குழப்பத்தை உண்டாக்கி அதைத் தடியடியில் கொண்டு வந்து விட வேண்டுமென்ற நோக்கம்கொண்டே ஸ்ரீராமச்சந்திர நாயுடுவை இழுத்துப்போன போலீசார், கூட்டத்தைத் தாண்டி வெளியே போய் விடப் போகிறார்கள்! ஜனங்கள் எல்லாரும் இன்று இரண்டிலொன்று பார்த்துத்தான் விடுவது என்ற ஆவேசத்துடன் எழுந்து நின்றார்கள்! கூட்டத்தில் ஒழுங்கு முறை எல்லாம் பறந்து போனது.

கலகத்தையே எதிர்பார்த்துக் கொண்டு ரிசர்வ் போலீஸ் ஒருபுறம் பதுங்கிக்கொண்டிருந்தது. இதற்கிடையில் கூட்டத்தைச் சமாப்தி பண்ணியாக வேண்டும். சற்றுத் தவறினால் குற்றமெல்லாம் சத்தியாக்கிரகத் தலைவர்மேல் சுமத்தப்படும் என்பது நிச்சயம். இப்படிப்பட்ட நெருக்கடியான நிலைமையில் தொண்டர்களில் ஒருவர் ''மகாத்மா காந்திக்கு ஜே!'' என்று கோஷித்தார். அதைத்

படம் : ராஜாஜியும் வேதாரண்ய வீரர்களும்.

தொடர்ந்து கூட்டத்தில் ஜெயகோஷம் பிரதி பலித்தது. ஆஹா! இந்தப் பெயரின் மஹா சக்தியை என்னென்று சொல்வது! அடுத்த கடிகையிலேயே இதனால் எல்லா ஜனங்களும் வசீகரமாயினர். அலை ஓய்ந்த சமுத்திரம் போல் அங்கு நிசப்தம் ஏற்பட்டது.

நள்ளிரவு மூன்று மணிக்கெல்லாம் ராஜாஜி எழுந்துவிட்டார். தம்மோடு வரும் தொண்டர்களை மட்டும் ஓசையில்லாமல் எழுப்பும்படி செய்தார். ஆசிரமத்தில் வழக்கம்போல் நான்கு மணிக்கெல்லாம் மற்றத் தொண்டர்கள் எழுப்பி விடப்பட்டனர். பிரார்த்தனை முடிந்த பின்பு ஒருவருக்கொருவர் தலைவர் எங்கே என்று விசாரிக்கத் தலைப்பட்டனர். அது சமயம் ஐந்து மணிக்கு மேலாகியிருந்தது. இந்நேரம் உப்பளத்தில் போய் உப்பு அள்ளிக் கொண்டிருப்பார்கள் என்று சொல்லப்பட்ட பதிலைக் கேட்டு ஒவ்வொரு தொண்டரும் ஆச்சரியத்துடன் அங்கலாய்த்தார்.

தலைவர் தாம் கைது செய்யப்பட்டால் தம்முடைய ஸ்தானத்தில் ஸ்ரீ சந்தானம் அடுத்தபடியாய்த் தலைவராய் இருந்துவர வேண்டுமென்று ஏற்கனவே எழுதிவைத்துவிட்டுப் போயிருந்தபடியால் ராஜாஜி கைதான அந்த நிமிஷம் முதல் அன்னவர் தலைவர் பதவியை ஏற்றுக் கொண்டார்.

ஆசிரமத்துக்கு வெளியே சுற்றிலும் தெருவில் போலீஸ் ஜவான்கள் ஆசிரமத்தை முற்றுகை போட்டு நின்று கொண்டிருந்தனர், ஆசிரமத்தைச் சோதனை போட்டுச் சுலபமாய் உப்பைக் கைப்பற்றிக் கொள்ளலாம் என்ற எண்ணத்தோடு.

எல்லா உப்பும் ஒரு கூடையில் போடப்பட்டுத் தொண்டர்கள் இருந்த ஜாகையின் நடுவில் வைக்கப்பட்டிருந்தது. அதைச் சுற்றிலும் தொண்டர்கள் வட்டமாகக் கவிழ்ந்து கொண்டு ஐந்தாறு வரிசையாகக் கையோடு கைகளைச் சங்கிலிக் கோவையாகக் கோத்துக் கொண்டு உட்கார்ந்து கொண்டார்கள்.

போலீஸ் உத்தியோகஸ்தரின் உத்தரவுக் கிணங்கி ஜவான்கள் தொண்டர்களை ஒவ்வொருவராக இழுத்துப் பிரிக்க ஆரம்பித்தார்கள். முதல் வரிசையில் உட்கார்ந்திருந்த அ. வைத்தியநாதய்யர் முதலியோரை வெகு சீக்கிரம் வெளியே கொண்டு போய்ச் சேர்த்து விட்டனர். ஒரு தடவை வெளியே கொண்டு விடப்பட்டால் மீண்டும் திரும்பி வருவதில்லை என்ற தர்ம நியாயத்துக்குக் கட்டுப்பட்டவராய் வெளியே போனவர் போலீஸ்காரர்கள் செய்யும் அட்டூழியங்களையெல்லாம் பேசாமல் பார்த்துக்கொண்டிருக்க வேண்டிய நிலையில் இருந்தனர். சுற்றிலும் வட்டமாய்க் கவிழ்ந்திருந்த தொண்டர்கள் தங்கள் முழு வல்லமையும் காட்டி உயிரினும் பெரிதாய் உப்பைக் காத்து வரத் தொடங்கினர். வெளி வரிசையில் இருந்தவர்கள் உப்பிருந்த பக்கமாய் முன்னால் சாய்ந்து கொண்டு அடி வரிசையில் உப்பை படுத்து உட்கார்ந்திருந்த நாலைந்து தொண்டர்களுக்



குக் காற்றோட்ட மில்லாமல் செய்து விட்ட னர். தொண்டர்கள் ஒவ்வொருவராய்ப் பிரிக்கப்பட்டு அப்புறப் படுத்தப்பட்டுக் கொண்டிருந்தனர். இனி உள் வரிசை ஒன்று தான் பாக்கி இருந்தது. . ஆனால் அவர் களை அப்புறப்படுத்துவது சிரமமாக இராத படி எல்லோரும் மூர்ச்சையாகி யிருந்தனர். இவர்கள்தான் அன்றைய நாடகத்தில் தங்கள் பங்கைச் சரிவரச் செலுத்திக் காண்பித்த, உண்மை வீரர்கள்.

இவர்களில் முக்கியமாகக் குறிக்கப்பட வேண்டியவர்கள் மதுரைத் தொண்டர்கள் கே. ஏ. கிருஷ்ணமாச்சாரியும், வீராசாமி யும், கோயமுத்தூர் தொண்டர் ராஜு வும் ஆவர். இவர்கள் உள்ளங்கையில் உப் பைக் கௌவிக்கொண்டு அப்படியே மூர்ச்சை போயிருந்தனர்.

**மே** மாதம் 29ந் தேதியன்று ஆசிரமம் பூராவையும் ஒரே மொத்தமாகக் கைது செய்து ஆசிரமத்திலிருந்த எல்லாப் பொருள் களையும் பறிமுதல் செய்து கொண்டு ஆசிர மத்தையும் குருவிக் கூட்டைப் பிய்த்து எறிந்த குரங்கைப் போலப் பிடுங்கி எறிந்து தங்கள் வன்மத்தைபெல்லாம் தீர்த்துக் கொண்டார்கள். டாக்டர் ராஜன் ஒரு வரு ஷம் வெறுங்காவல் தண்டனை அடைந்து 'ஏ' வகுப்பில் பொரிக செய்யப்பட்டார். தலைவர் ஜி. ராமச்சந்திரனும், ஹரிஹர சர்மாவும், ஆனந்த தீர்த்தாவும் ஒவ்வொரு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டு 'பி' வகுப்பில் பொரிக செய்யப்பட்டனர்.

வேதாரண்ய யாத்திரையும், உப்பு சத்தி யாக்கிரகமும் ஒன்றரை மாத காலம் வரை நீடித்து நடைபெற்றது.

நிகழும் காந்தி சதாப்தி ஆண்டில் தண்டி யாத்திரையை வடக்கே மீண்டும் நடத்திக் காட்டினார்கள் காந்தி பக்தர்கள். அண்ணலின் ஆக்ஞைப்படி இன்றைக்கு முப்பத்தொன்பது ஆண்டுகளுக்கு முன்னால் தமிழகத்தில் ராஜாஜியின் தலைமையின் கீழ் உப்பு சத்தியாக்கிரகம் நடந்தது. அந்த வேதாரண்யம் பாத யாத்திரையையும் மீண்டும் நடத்திக் காட்டப் போகிறார்கள் இம்மாதத்தில், காந்திவாதிகள் பலர்.

இந்தப் புனித யாத்திரை தொடங்கும் சமயம் முன்பு வேதாரண்யம் உப்பு சத்தியாக்கிரகத்தின்போது நிகழ்ந்த சில சுவையான சம்பவங்களை இங்கு நினைவுகூர் கிறார் திரு கே. அருணாசலம். (அருண்)

**1930** ஏப்ரல் 13ந் தேதி தமிழகத்தின் சரித்திரத்தில் பொன்னான நாள். உப்பு சத்தியாக்கிரக இயக்கம் அன்றுதான் திருச்சி யில் டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் அவர்கள் இல்லத்திலிருந்து வேதாரண்யத்தை நோக் கிப் புறப்பட்டது. திருச்சி திருவிழாக் கோலம் பூண்டிருந்தது. தமிழகத்தின் பல மாவட் டங்களிலிருந்தும் பத்தாயிரம் பேர்களுக்கு மேல் தொண்டர்களாகக் கலந்துகொள்ளப் போட்டி போட்டுக் கொண்டு வந்தார்கள். தலைவர் ராஜாஜி செயல் கமிட்டியின் ஒத் துழைப்போடு பதினைந்து நாட்கள் அனை வரையும் பேட்டி கண்டார். குறுக்குக் கேள்விகள் போட்டுப் பத்தாயிரம் பேர்களில் 90 தொண்டர்களைத் தேர்ந்தெடுத்தார். ஐ. ஸி. எஸ். செலக்ஷன் போல் இத் தேர்தல்

அந்தக் காலத்தில் பிரமாதப் பட்டது. பம்பாய் தமிழர்களும் திரு ஏ. சுப்பிரமணியம் தலைமையில் ஒரு தொண்டர் படை அனுப்பி யிருந்தார்கள். பதினேழு வயது இளைஞர்கள் கே. அருணாசலமும், ஸ்ரீ ஓ. வி. அழகேசனும் தொண்டர் படையில் இடம் பெற்றனர்.

கல்லணையிலிருந்து தஞ்சை ஜில்லாவில் நுழைவதற்கு முன்னால் நள்ளிரவிலே தொண் டர்களின் அவசரக் கூட்டத்தைத் தலைவர் ராஜாஜி கூட்டினார்.

''கல்லணை பாலத்தைத் தாண்டினால் தஞ் சாவூர் ஜில்லாவுக்குள் நுழையவிருக்கிறோம். அங்கே பெரிய ஆபத்துக்களெல்லாம் காத் திருக்கின்றன. நமது வருகையைக் கலெக் டர் தார்ன் துரை தடை செய்திருக்கிறார். நாம் தஞ்சையில் நுழைந்தவுடனே தடி யடிப் பிரயோகம் நடக்கலாம், துப்பாக்கிப் பிரயோகம் தொடரலாம். நம்மில் பலர் இன்னுயிரை விடும்படி நேரிடலாம். கை கால்களை இழக்கும்படி ஆகலாம். இந்தக் கஷ்டங்களை அனுபவிக்கத் தயாராயிருக் கிறவர்கள் மாத்திரம் நான் முன்னால் போகும்போது பின்னால் தொடருங்கள். யாருக்காவது பயமோ, குடும்பப் பாசமோ இருந்தால் அவர்கள் இந்தத் தோட்டத்தி லேயே தங்கிவிடலாம். நான் அவர்களைத் திரும்பிப் பார்க்கவே மாட்டேன். அதன் பின் யார் யார் யாத்திரையில் என்னைப் பின்பற்றவில்லை என்பதை யாருக்கும் வெளி யிட மாட்டேன்!'' என்று உருக்கமாக வேண்டிக் கொண்டார்.

தஞ்சை மண்ணில் அவர் அடியெடுத்து வைத்தபோது தொண்டர்களில் ஒருவர் தவிர மற்றவர்கள் அனைவரும் பின் தொடர்ந்தனர். அந்த ஒருவர் மெத்தப் படித்தவர். எம். ஏ. பட்டதாரி! இதை ராஜாஜி அவர்கள் வெளியிடவில்லை. தொண் டர்களாகவே பார்த்து இன்னார் என்று புரிந்து கொண்டனர்.

தஞ்சை மாவட்டத்திலே கோவிலடிக்குள் நுழைந்தவுடன் அமோக வரவேற்புக் கிட்டியது.

அன்று ஆற்றங் கரையில் நடைபெற்ற கூட்டத்தில் ஆயிரக் கணக்கான மக்கள் கூடியிருந்தனர். ராஜாஜி அன்றைய கூட் டத்தில் கலெக்டர் தார்ன் துரைக்கு நன்றி தெரிவித்துப் பேசியது போராட்ட வர லாற்றில் பொன்னெழுத்தில் பொறிக்கப் பட வேண்டியதாகும்.

''இவ்வளவு மக்கள் திரளாகக் கூடி எங்களுக்கு அளித்த வரவேற்பு காந்திஜி தலைமையில் அந்நியத் தளைகளைத் தகர்த் தெறிய மக்கள் கொண்டுள்ள உறுதியைக் காட்டுகிறது. இதற்காக நான் கலெக்டர் தார்ன் துரைக்குப் பெரிதும் கடமைப்பட் டுள்ளேன்! நாங்கள் வரப்போகும் செய்தி பல ஊர்களுக்குப் பரவாதிருந்திருக்கலாம். ஆனால் தார்ன் துரை ஒவ்வொரு கிரா மத்துக்கும் ஆட்களை அனுப்பி 'ராஜாஜி தலைமையில் உப்பு சத்தியாக்கிரகத் தொண் டர்கள் வருகிறார்கள். அவர்களுக்குத் தங்க இடமோ, குடிக்கத் தண்ணீரோ, உண்ண உணவோ யாரும் தரக் கூடாது. தந்தால் கடுமையாகத் தண்டிக்கப்படுவார்கள்' என்று தண்டோரா போடச் சொன்னார். அதைக் கேட்டல்லவா நீங்கள் பெருந் திரளாக வர வேற்கக் கூடியிருக்கிறீர்கள்! இவ்வாறு எங்கள் வருகையைப் பரப்பிய தார்ன் துரைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.''

தொண்டர்களைப் பட்டினிபோட்டு வென்று விடலாம் என்று தார்ன் துரை நினைத்தார். ஆனால் மக்கள் பாயசம், லட்டு, பழ வகைகள் இத்தியாதியுடன் கூடிய விருந்தை வீடுகளின் திண்ணைகளிலே தலை வாழை இலைகளைப் போட்டு எல்லாத் தொண்டர் களுக்கும் பரிமாறினார்கள்!

✿ பாத யாத்திரையில் கலந்து கொள்ளும் தொண்டர்கள் புகை பிடிக்கக் கூடாது என்று கடுமையாக ராஜாஜி கட்டளையிட் டிருந்தார். இந்தக் கட்டளையை மீறியவர் ஒருவர் தம் வீட்டுக்குத் திருப்ப அனுப்பப் பட்டார். கட்டுப்பாட்டுடன் தொண்டர்கள் உண்ண வேண்டும். ஓர் இடத்திலே தொண் டர் ஒருவர் நாக்கு ருசி இழுக்க, ''இன்னும் கொஞ்சம் பாயசம் போடுங்கோ!'' என்று கேட்டு விட்டார். பிறகு அவர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட்டது!

✿ நூறு தொண்டர்களில் 'கத்தியின்றி ரத்த மின்றி யுத்தமொன்று வருகுது' என்று பாடித் தேசியக் கனல் எழுப்பிய நாமக்கல் கவிஞர் வெ. ராமலிங்கம் பிள்ளையும் ஒருவர். இந்தப் பாத யாத்திரையில் கலந்து கொண்டவர்களில் முன்னாள் முதன் மந்திரி ஓ. பி. ராமசாமி ரெட்டியார், தினமணி ஆசிரியர் ஏ. என். சிவராமன், திருச்சி 'நகர தூதன்' ஆசிரியர் திருமலைசாமி ஆகியோரைக் குறிப்பிட்டுச் சொல்லலாம்.

✿ வேதாரண்யத்தில் சர்தார் வேதரத்தினம் தம் சொந்த இடத்திலே கொட்டகை போட்டு உப்புச் சத்தியாக்கிரகிகளுக்கு இடம் கொடுத்தார். பர்தோலி வரிகொடா இயக்கத்தைத் திரமாகத் தலைமை தாங்கி நடத்திய வல்லபாய் படேலுக்குச் சர்தார் பட்டம் வழங்கப்பட்டது. அதேபோல் வேதாரண்யத்தில் உப்புப் போருக்குத் துணி கரமாக ஏற்பாடுகளைச் செய்ததற்காக மக்கள் வேதரத்தினத்தைச் சர்தார் வேதரத்தினம் என்று அன்புடன் அழைத்தனர். அவரது நிலங் களைச் சர்க்கார் பறிமுதல் செய்தனர். பின் னர், ராஜாஜி அவற்றை மீட்டுக்கொடுத்தார்.

✿ வேதாரண்யத்தில் தொண்டர்களெல்லாம் அணி அணியாகச் சென்று அடியில் உப்புள்ள நீர்க் குட்டைகளிலிருந்து உப்பெடுத்தார்கள். போலீஸ்காரர்கள் முன்பே போய் நீர்க் குட்டைகளில் சப்பாத்தி முட்களை வெட்டிப் போட்டிருந்தார்கள். முட்களையோ சகதி யையோ பொருட்படுத்தாமல் உப்பை எடுத்து வந்து தொண்டர்கள் தெருக்களில் மக்களுக்கு விநியோகம் செய்தார்கள். போலீஸார் பகல் பன்னிரண்டு மணி கொளுத்தும் வெய்யிலில் தொண்டர்களின் கால்களைப் பிடித்துத் தரையிலே இழுத்துக்கொண்டே போனார்கள்.

உப்புள்ள வரை சரித்திரத்தில் இடம் பெறப் போகிற வேதாரண்ய உப்பு சத்தியாக் கிரஹப் போர் நெஞ்சிருக்கும் வரை நினைவை விட்டகலாது. பேட்டி: **பி. எஸ். மணி**

# சாதாரண ஜலதோஷம் சிலரை உடனே பற்றிக் கொள்ளுகிறது. மற்றவர்களைப் பற்றுவதில்லை. ஏன் ?



சாதாரண ஜலதோஷத்தால் எளிதில் பாதிக்கப்படுதல் மற்றும் இதர உடற்பிணிகள், அதாவது பசியின்மை, சோர்வு, சருமம் மற்றும் பற் கோளாறுகள் இவற்றிற்கு காரணம், விடமின்கள் மற்றும் தாதுச் சத்துக்களின் பற்றாக்குறையாக இருக்கக்கூடும். எனவே, போதிய அளவு விடமின்களும் தாதுச் சத்துக்களும் உங்கள் உடலுக்கு ஒழுங்காகக் கிடைப்பதற்காக நீங்கள் நாள் தோறும் ஒரு விம்க்ரான் சாப்பிடுங்கள். விம்க்ரானில் 11 அத்தியாவசிய விடமின்களும், 8 முக்கியமான மினரல்களும் அடங்கியுள்ளன. அதனால் உங்களுக்கு ஆரோக்கியம், வலிமை, ஆற்றல், மற்றும் நோய்களை எதிர்க்கும் சக்தி கிடைக்கும்.

## விம்க்ரான்®

மல்டிபிள் விடமின்-மினரல்
டேப்லெட்டுகள்






**நாள் முழுவதும் உங்களை சக்தியுடன் வைத்திருக்க ! ஒரே ஒரு விம்க்ரான் மாத்திரை போதுமானது.**

SQUIBB® SARABHAI CHEMICALS

Ⓡ இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்ப்பரேட்டெட்டின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்கைக் குறிக்கிறது. காம்சந்த் பிரேம் சந்த் பிரைவேட் லிட்., இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

Shilpi SC 4A/69 Tam

# ராமாயணம்

ராஜாஜி

மன்னனுடைய உத்தரவின் பேரில் அந்தரங்க அமாத்தியனான சுமந்திரன் ராமனை அழைத்து வரச் சென்றான். ராமன் விஷயம் தெரியாதவனாகத் தந்தையின் முன்னால் வந்து நின்றான். பட்டாபிஷேக நிச்சயத்தைப் பற்றி அரசன் சொன்னதைக் கேட்டு, ''தங்கள் ஆணைப்படி நடக்க நான் கடமைப்பட்டவன்'' என்றான்.

''உனக்கு நான் சொல்ல வேண்டியது ஒன்றுமில்லை. நீ குணவான். ஜனங்கள் எல்லாரும் உன்னை விரும்புகிறார்கள். இனி நீ முன்னை விட அதிகமான வினயத்துடனும் ஜாக்கிரதையுடனும் நடந்து கொண்டு எல்லா பாக்கியமும் புகழும் அடைவாயாக'' என்று அரசன் மகனை ஆசீர்வதித்தான். ராமனும் தன்[" இருப்பிடம் திரும்பினான்.

* * *

மறுபடியும் அரசன் ஏதோ யோசித்தவனாக, ''ராமனை அழைத்து வா'' என்று சுமந்திரனுக்கு உத்தரவிட்டான். ''இதென்ன காரணம்? எதற்காகச் சக்கரவர்த்தி மறுபடியும் என்னை வரச் சொன்னது?'' என்று ராமன் கேட்டான்.

''எனக்குக் காரணம் தெரியாது. அரசன் அழைத்து வரச் சொன்னது தான் எனக்குத் தெரியும்'' என்று சொன்னான் சுமந்திரன்.

'யுவராஜ்ய பட்டாபிஷேக விஷயத்தில் மந்திராலோசனை செய்து உசித அனுசித சந்தேகம் ஏதாவது ஏற்பட்டிருக்கலாம். எப்படியானாலும் சரியே; தான் அவசரப்பட வேண்டியதில்லை' என்பது ராமனுடைய எண்ணம். ராஜ்யாதிகாரம் உடனே வகிக்கவேண்டும் என்று ராமனுக்கு ஆசை இருக்கவில்லை. அதைக் கடமையாகவே பாவித்தான். அரசன் ஒப்புக்கொள்ளும்படி சொன்னால் சரி, இல்லாவிட்டால் வேண்டியதில்லை என்பது அவன் கருத்து.

கம்பர் பாட்டும் இதை எடுத்துக் காட்டுகிறது:

**தாதை அப்பரி(சு) உரைசெயத்**
**தாமரைக் கண்ணன்**
**காதல் உற்றிலன் இகழ்ந்திலன்**
**கடன் இதென்(று) உணர்ந்தும்**
**'யாது கொற்றவன் ஏவிய(து)**
**அது செயல் அன்றோ**
**நீதி எற்(கு)என நினைந்தும்**
**அப்பணி தலை நின்றான்**

உடனே ராமன் அரசன் இருந்த இடம் சென்றான். மகனைக் கட்டி அணைத்து, ஆசனத்தில் அமரச்செய்து ''ராமனே, எனக்கு வயது அதிகமாகி விட்டது. எல்லாச் சுகங்களும் நீண்ட ஆயுளும் அனுபவித்துவிட்டேன். செய்ய வேண்டிய தேவ பித்ரு காரியங்களையெல்லாம் செய்து தீர்த்தேன். இனிச் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை. உனக்கு அபிஷேகம் செய்வித்துச் சிம்மாசனத்தில் அமரச் செய்வதைத் தவிர வேறொன்றும் நான் ஆசைப்படவில்லை. நான் நேற்று கெட்ட சொப்பனங்கள் கண்டேன். தவிர வருங்கால விஷயமறிந்தவர்கள் என்னுடைய ஜாதகத்தின்படி இப்போது எனக்கு மரணமும் பெரிய துக்கமும் சம்பவிக்கலாம் என்கிறார்கள். ஆனபடியால் உன் பட்டாபிஷேகத்தை நாளைய தினமே செய்து முடித்து விடவேண்டும் என்பது என் எண்ணம். நாளைய தினம் புஷ்ய நட்சத்திரம். நல்ல நாள் என்று பெரியோர்கள் சொல்கிறார்கள். இந்தக் காரியத்தை உடனே செய்து முடிக்க வேண்டும் என்று என் உள்ளத்தில் ஏதோ என்னைத் தூண்டித் துரிதப்படுத்துகிறது. உடனே நீயும் சீதையும் பட்டாபிஷேகத்துக்காக விரதமிருங்கள். கிரமப்படி இன்று உபவாசமிருந்து, தரையில் படுத்துத் தூங்கி, மங்கள காரியத்துக்கு ஏதொரு இடையூறும் வராதபடி பூஜை செய்வாயாக. பரதன் ஊரிலில்லை. அவன் தன் மாமனுடைய ஊருக்குப் போய் வெகு நாட்களாயின. கேகய தேசம் வெகு தூரத்தில் இருக்கிறது. அவனுக்கு இப்போது சொல்லி அனுப்பி வரவழைக்க அவகாசமில்லை. அவன் வருவதற்காகக் காரியத்தை நிறுத்தி வைப்பது உசிதமல்ல'' என்றான்.

* * *

தசரதன் பேசிய பேச்சில் கவி நமக்கு இடம் தருகிறார். கைகேயியை விவாகம் செய்து கொண்ட காலத்தில் தசரதன் கேகயனுக்குக் கொடுத்த

வாக்கு அவன் நினைவுக்கு வந்து அது அவனை மனத்தில் வேதனை செய்தது போலத் தோன்றுகிறது. பரதன் மிக நல்லவன். அண்ணனிடம் அவன் மிக்க அன்பும் பக்தியும் வைத்தவன். ஆன படியால் கைகேயி விவாக நிபந்தனையை அவன் பொருட்படுத்தமாட்டான். ராமனுடைய பட்டாபிஷேகத்தை அவன் ஆட்சேபிக்கவேமாட்டான். ஆயினும் மனிதனுடைய மனத்தை நம்பக்கூடாது. நல்லவர்களுடைய புத்தியும் சில சமயம் மாறிப் போகும் என்று தசரதன் பயந்தான்.

''பரதன் அண்ணனைக் குருவாகக் கருதுகிறவன்; தர்மாத்மா; சுத்தமான உள்ளமும் ஆசைகளை அடக்கும் சக்தியும் பெற்றவன். ஆயினும் மனுஷ்யனுடைய சித்தம் எப்போதும் ஒரே விதமாக இருக்காது'' என்று தசரதன் ராமனிடம் சொல்லி, மறு நாளே பட்டாபிஷேகம் முடித்துவிட வேண்டும்; பரதன் வருவதற்காகக் காக்க வேண்டாம் என்று வசிஷ்டருக்கும் தெரிவித்து விட்டான்.

தந்தையினிடம் விடை பெற்றுக் கொண்டு ராமன் உடனே கௌசல்யா தேவியின் அந்தப்புரத்துக்குச் சென்றான். பெற்ற தாய்க்கு விஷயத்தைச் சொல்லி ஆசி பெறுவதற்காகச் சென்றான். அதற்கு முன்னதாகவே கௌசல்யைக்குச் சமாசாரம் எட்டிவிட்டிருந்தது. சுமத்திரை, சீதை, லக்ஷ்மணன் எல்லாரும் கௌசல்யா தேவியுடன் இருந்தார்கள்.

கௌசல்யை மடிப் பட்டு உடுத்தி மகனுடைய சுபத்தைக் குறித்துப் பூஜையில் அமர்ந்தாள்.

தந்தையிட்ட ஆணையைப் பற்றிக் கௌசல்யையிடம் ராமன் சொன்னான்.

''கேள்விப்பட்டேன், மகனே! இது உண்மையென்று நீயும் சொல்லுகிறாய். சிரஞ்சீவியாக இருப்பாயாக! ராஜ்யத்தை வகித்து விரோதிகளை அடக்கி, பிரஜைகளையும் பந்துக்களையும் காப்பாற்றி வருவாய். உன் குணங்களால் பிதாவைத் திருப்தி செய்தாய். அது என்னுடைய பாக்



கியம்'' என்று சொல்லி மகனை ஆசீர்வதித்தான்.

ராமன் தன் பக்கத்தில் நின்ற தம்பி லக்ஷ்மணனைப் பார்த்துச் சிறிது நகைத்து. ''லக்ஷ்மணா! என்னோடு சமமாக இருந்து செல்வம் நிறைந்த இந்த நாட்டை நீ ஆள்வாயாக. என் உடலுக்கு நீ வெளியில் நடமாடும் இரண்டாவது உயிரல்லவா? உனக்காகத்தான் இந்த ராஜ்ய பதவி என்னை அடைந்திருக்கிறது. எனக்குச் சேர்ந்த பாக்கியமெல்லாம் உன்னுடையதுமேயாகும்'' என்று சொன்னான்.

ராஜ்ய பாரத்தை லக்ஷ்மணனும் சேர்ந்து வகிக்க வேண்டும் என்று கோரியது அன்பினால் உண்டான பேச்சு. சிறு நகைப்பு, தானாக வந்து சேர்ந்த சௌபாக்கியத்தைக் குறித்து உள்ளத்தில் பற்றின்மையினால் உண்டான மெய்ப்பாடு.

பிறகு இரு தாய்மார்களையும் வணங்கி விடைபெற்றுச் சீதையை அழைத்துக் கொண்டு தன் இல்லத்துக்குச் சென்றான்.

அரசன் கட்டளைப்படி வசிஷ்டர் ராமனுடைய இல்லத்துக்கு வந்தார். இதையறிந்ததும் ராமன் வெளியில் சென்று வசிஷ்டரை வணங்கி வாகனத்திலிருந்து கைகொடுத்து இறக்கி உள்ளே அழைத்துச் சென்றான்.

வசிஷ்டர் மந்திர பூர்வமாக உபவாச சங்கற்பம் செய்வித்து விட்டு அரசனிடம் திரும்பச் சென்றார். போகும் போது ஜனங்கள் ராஜ மார்க்கத்தில் ஆங்காங்கே கும்பல் கும்பலாகக் கூடிப் பட்டாபிஷேக மகோற்சவத்தைப் பற்றிச் சந்தோஷமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். நகரவாசிகள் வீடுகளையெல்லாம் அலங்கரித்துக் கொடிகள் ஏற்றிக் கொண்டிருந்தார்கள். தெருக் கூட்டத்துக்கு இடையில் கஷ்டப்பட்டு வசிஷ்டருடைய தேர் மெல்லச் சென்றது.

வசிஷ்டர் வந்ததும் அரசன் ஆசனத்திலிருந்து இறங்கி அவரைக் கண்டு ''செய்ய வேண்டிய உபவாச சங்கற்பம் செய்வித்தீர்களா?'' என்று கேட்க, ''ஆயிற்று'' என்று அவர் சொன்னதும் மகிழ்ந்தான். ஏதாவது இடையூறு நேரிடுமோ என்று தசரதனுக்குத் திகில் இருந்து கொண்டேயிருந்தது.

நகரம் மகிழ்ச்சிக் கடலில் மிதந்து கொண்டிருந்தது. அடங்காத உற்சாகம் பெண்களுக்கு. எல்லா வீடுகளிலும், எல்லாத் தெருக்களிலும் தங்களுடைய சொந்த மங்கள நிகழ்ச்சியாகவே ராமனுடைய பட்டாபிஷேகத்தை ஆண் பெண் குழந்தைகள் எல்லாரும் பாவித்து எல்லை கடந்த குதூகலத்தில் இருந்தார்கள்.

மறு நாள் காலையே இந்த மகோற்சவம் நடக்கப் போகிறது என்று தெரிந்ததும் சந்தோஷமும் பரபரப்பும் இருமடங்காய் விட்டன. சுற்றுப் பக்கத்துப் பிரதேசவாசிகள் எல்லாரும் அயோத்திக்குப் பட்டாபிஷேக மகோற்சவத்தைப் பார்க்க வந்து சேர ஆரம்பித்துவிட்டார்கள். எங்கு பார்த்தாலும் மங்கள வாத்தியமும் கோஷங்களுமாக இருந்தன.

ராமனும் சீதையும் தங்களுடைய மனையில் நாராயணனைத் தியானித்து ஓமத் தீயில் நெய்விட்டு, எஞ்சி நின்ற நெய்யைத் தேவப் பிரசாதமாகப் பக்தியுடன் அருந்தி இருவரும் தரையில் புல் பரப்பி அன்றிரவு படுத்தார்கள். அதிகாலையில் மங்கள வாத்தியங்கள் எழுப்ப இருவரும் எழுந்தார்கள்.

தசரதன் ராஜ சபையைக் கூட்டி ராமசந்திரனுக்கு நாளைக்கே பட்டாபிஷேகம் செய்துவிட வேண்டும் என்று நிச்சயித்த அந்த நாள், மந்தரை தற்செயலாக அந்தப்புரத்து மேல் மாடி ஏறி அழகிய உப்பரிகையிலே போய் நின்றாள். உயரத்திலிருந்து நகரத்தைப் பார்த்தாள். (தொடரும்)




பரதநாட்டியம், கதகளி ஆடல் உருவங்களைக் கொண்ட தபால் தலைகள் வெளிவருமானால், அது எந்த நாட்டில் இருக்கும் என்று நினைக்கிறீர்கள்?

'சந்தேகமென்ன, இந்தியாவில்தான்' என்று பதிலளிப்பீர்களானால், மூன்றிலும் தவறு. அண்மையில் சிங்கப்பூர் அரசாங்கம்தான் இத்தகைய தபால் தலைகளை வெளியிட்டிருக்கிறது. கலைகளை ஊக்குவிக்கும் நோக்கத்தில் பச்சை நிறப் பின்னணியில் பரதநாட்டிய உருவையும் பழுப்பு நிறப் பின்னணியில் கதகளி உருவையும் தபால் தலைகளாக வெளியிட்டிருக்கிறது.

சிங்கப்பூர் முந்திக் கொண்டு விட்டது.

— கோமளா வரதன்



# Its the look of the Century...

in the dash of styling and the comfort of textiles made by Century Mills, pure, soft, feather-light cotton sarees that meet the challenge of every occasion, every mood

- Cotcell-o (wash-n-wear)
- Silken touch
- Lakes beauty



**CENTURY**
**SPG. & MFG. CO. LTD.**

Century Bhavan,
Dr. Annie Besant Road, Worli, BOMBAY-25 DD.







சாமா



"இது என்ன லாரியிலே பயில்வான்கள் வந்து இறங்கறு?"

"நாலாங் கிளாசுக்கு அட்மிஷன் கிடைச்சா நாலாயிரம் தேங்காய் உடைக்கிறதா வேண்டிண்டாளாம்! உடைக்கிறதுக்கு ஆட்கள் வந்து இறங்கறு!"

★



"எங்க நீங்க பள்ளிக்கூட ஹெட்மாஸ்டரா?"

"ஆமாம்! ஆனால் மேற்கொண்டு சேர்த்துக்கப் பள்ளியில் இடமில்லே. போயிட்டுவா!"



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

மூப்பத்தைந்தாம் அத்தியாயம்

## இலங்கைச் சிங்காதனம்

பிக்ஷு கையில் பிடித்த தீபத்தின் வெளிச்சத்தில் சுற்றுமுற்றும் ஒரு கணம் பார்த்தார். இளவரசரும் அவருடைய தோழர்களும் நிற்பதைக் கண்டு கொண்டார் போலும். மறு கணம் விளக்கும் வெளிச்சமும் மறைந்தன. சிறிது நேரத்துக்கெல்லாம் பிக்ஷு தடாகத்தின் படிக்கட்டுகளின் வழியாக நடந்து வருவது தெரிந்தது. இளவரசர் நிற்குமிடத்துக்கு வந்தார். நிலா வெளிச்சத்தில் அவருடைய திருமுகத்தை ஏறிட்டுப் பார்த்தார்.

''தேவப்ரியா! வருக! வருக! தங்களை எதிர்நோக்கி வைதுல்ய பிக்ஷு சங்கம் காத்திருக்கிறது. மகா தேரோ குருவும் விஜயம் செய்திருக்கிறார். குறிப்பிட்ட நேரம் தவறாது தாங்கள் வந்து சேர்ந்தது பற்றி என் உள்ளம் உவகை கொண்டு நன்றி செலுத்துகிறது!'' என்றார்.

''அடிகளே! இந்தச் சிறுவனிடம் பல குறைகள் குடிகொண்டிருப்பதை அறிந்துள்ளேன். எனினும், வாக்குத் தவறுவதில்லை என்ற ஒரு நல் விரதத்தை அனுசரித்து வருகிறேன். அந்த விரதத்தில் என்றும் தவறியதில்லை!'' என்றார் பொன்னியின் செல்வர்.

''இன்று சூரியன் அஸ்தமிக்கும் நேரம் வரையில் தாங்கள் வந்து சேரவில்லை என்று அறிந்தேன். அதனால் சிறிது கவலை ஏற்பட்டது.''

''முன்னதாக வந்திருந்தால், ஒரு வேலை வாக்கை நிறைவேற்ற முடி-

யாமல் போயிருக்கலாம். அதனாலேயே சமயத்துக்கு வந்து சேர்ந்தேன்.''

''ஆம், ஆம்! வானில் ஜோதிமயமாக ஒளிரும் கதிரவனை மறைத்து விடுவதற்குப் பல மேகத் திரள்கள் சுற்றி வருகின்றன. நாங்களும் அறிந்துள்ளோம். ஆனால் அந்த மேகத் திரள்கள் எல்லாம் புத்த பகவானுடைய கருணையென்னும் பெருங் காற்றினால் சின்னாபின்னமாகிக் கலைந்து விடும். போகட்டும்! இதோ நிற்பவர்கள் யார்? தாங்கள் நன்கு அறிந்தவர்கள் தானா? தங்களின் பூரண நம்பிக்கைக்கு உரியவர்களா? கொடுத்த வாக்கைத் தவறாது நிறைவேற்றக் கூடியவர்களா?'' என்று பிக்ஷு கேட்டார்.

''அடிகளே! என்னுடைய கரங்கள் இரண்டையும் எப்படி நான் நம்புகிறேனோ, அப்படியே இந்த நண்பர்களையும் நம்புகிறேன். எனினும் தங்களுக்கு விருப்பமில்லை என்றால் இவர்களை இங்கேயே விட்டு விட்டுத் தங்களுடன் தனித்து வரச் சித்தமாயிருக்கிறேன்!'' என்றார் இளவரசர்.

''இல்லை, இல்லை! அவ்வளவு பெரிய பொறுப்பை ஏற்றுக் கொள்ள நான் சித்தமாயில்லை. தங்களை நான் அழைத்துப் போகும் இடம் மிகப் பத்திரமானதுதான். ஆயினும், நீண்ட வழியில் போக வேண்டும். எந்த மூலையில் எந்தத் தூணுக்குப் பின்னால் என்ன அபாயம் மறைந்திருக்கும் என்று யார் சொல்ல முடியும்? இவர்கள் இருவரும் அவசியம் வரட்டும்!'' என்றார் பிக்ஷு.

இவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த வந்தியத்தேவனுடைய உள்ளம் கொந்தளித்தது. முன்பின் அறியாத தன்னிடம் இளவரசர் இவ்வளவு பரிபூரண நம்பிக்கை காட்டி மிக அந்தரங்கமான காரியத்துக்கு அழைத்து வந்ததை நினைத்துப் பூரிப்பு உண்டாயிற்று. இன்றிரவு ஏதோ முக்கியமான நிகழ்ச்சி நடைபெறப் போகிறது. அது என்னவாயிருக்கும் என்ற நினைவு மிக்க பரபரப்பை அளித்தது.

பிக்ஷு முன்னால் சென்று வழிகாட்ட மற்றவர்கள் பின்தொடர்ந்து சென்றார்கள். தடாகத்தின் படிக்கட்டுகளின் வழியாகச் சென்று பின்புறத்துக் கல் சுவரில் குடைந்து அமைந்திருந்த அறையில் புகுந்தார்கள். அதன் ஒரு பக்கம் சென்று இருட்டில் பிக்ஷு ஏதோ செய்தார். உடனே ஒரு வழி ஏற்பட்டது. உள்ளே வெளிச்சம் காணப்பட்டது. பிக்ஷு அங்கு வைத்



இருந்த தீபத்தைக் கையில் ஏந்திக் கொண்டார். மற்ற மூவரும் உள்ளே வந்ததும் வழியும் அடைபட்டது. வெளியே தடாகத்தில் சிங்க முகத்தி லிருந்து விழுந்த அருவியின் ஓசை மிக இலேசாகக் கேட்டது. இல்லாவிட்டால் ஒரு கணத்துக்கு முன்னால் அப்படித் தடாகக் கரையில் நின்று கொண்டிருந்தோம் என்பதையே அவர்களால் நம்ப முடியாமல் போயிருக்கும்.

குறுகலான சுரங்கப் பாதை வழியாக அவர்கள் சென்றார்கள். பாதை வளைந்து வளைந்து சென்றது. முடிவில்லாமல் சென்று கொண்டிருப்பதாகத் தோன்றியது. அவர்கள் காலடிச் சத்தமும் அதன் எதிரொலியும் பயங்கரத்தை உண்டாக்கின. வந்தியத்தேவனுக்கு நடு நடுவே இளவரசர் ஏமாந்து போய் ஏதோ ஒரு சூழ்ச்சியில் சிக்கிக் கொண்டாரோ என்ற ஐயம் உண்டாயிற்று.

பாதை அகன்று அகன்று வந்து கடைசியில் ஒரு மண்டபம் தெரிந்தது. எப்பேர்ப்பட்ட மண்டபம்? பிக்ஷு கையில் பிடித்து வந்த தீபத்தில் சிறிய பகுதிதான் மங்கலாகக் கண்ணுக்குப் புலனாயிற்று. ஆயினும் அதன் தூண்கள் பளிங்குக் கல்லினால் ஆன தூண்கள் என்பது தெரிந்தது. நாற்புறமும் புத்தர் சிலைகள் தரிசனம் தந்தன. நிற்கும் புத்தர்கள், படுத்திருக்கும் புத்தர்கள், போத நிலையில் அமர்ந்திருக்கும் புத்தர்கள், ஆசிர்வதிக்கும் புத்தர்கள், பிரார்த்தனை செய்யும் புத்தர்கள், — இப்படிப் பல புத்தர் சிலைகள் தோன்றின.

பளிங்கு மண்டபத்தைத் தாண்டி அப்பால் சென்றார்கள். மறுபடியும் ஒரு குறுகிய பாதை. பின்னர் இன்னொரு மண்டபம். இதன் தூண்கள் தாமிரத் தகடுகளினால் ஆனவை. இரத்தினச் சிவப்பு நிறம் பெற்றுத் திகழ்ந்தன. இந்த மண்டபத்தின் மேற்கூரையிலும் செப்புத் தகடுகள். அவற்றில் பல வகைச் சித்திர வேலைப்பாடுகள். நாலாபுறமும் வித விதமான புத்தர் சிலைகள். இம்மாதிரியே, அபூர்வமான மஞ்சள் நிற மரத் தூண்களை உடைய மண்டபம், யானைத் தந்தங்களால் இழைத்த தூண்களை உடைய மண்டபம், பொன்னும் மணியும் இழைத்த தூண்களைக் கொண்ட



மண்டபம், — இவற்றை யெல்லாம் கடந்து சென்றார்கள். அதி வேகமாக நடந்து சென்ற போதிலும் வந்தியத்தேவன் அங்கங்கே தூண்களைத் தொட்டுப் பார்த்துக் கொண்டே போனான். இளவரசர் அவற்றைச் சிறிதும் பொருட்படுத்தாது முன்னோக்கிய பார்வையுடன் சென்றது அவனுக்கு அளவிலா வியப்பை அளித்தது.

உலோக மண்டபங்களை யெல்லாம் தாண்டிக் கடைசியில் சாதாரண கருங்கல் மண்டபம் ஒன்றுக்கு வந்து சேர்ந்தார்கள். ஆனால் விசாலமான அம்மண்டபத்தில் அபூர்வமான காட்சி தென்பட்டது. முந்தைய மண்டபங்களில் புத்தர் பெருமானின் சிலைகளைத் தவிர மனிதர் யாருமில்லை. இந்தக் கருங்கல் மண்டபத்தில் புத்த பிக்ஷுக்கள் பலர் கூடியிருந்தார்கள். அவர்களுடைய முக மண்டலங்கள் தேஜஸ் நிறைந்து திகழ்ந்தன. அவர்களுக்கு மத்தியில் மகா தேரோ குரு நடுநாயகமாக ஒரு பீடத்தில் வீற்றிருந்தார். அவருக்கு எதிரே நவரத்தின கசிதமான ஒரு தங்கச் சிங்காதனம் காணப்பட்டது. அதன் அருகில் ஒரு பீடத்தின் மேல் மணி மகுடம் ஒன்றும் உடை வாளும் செங்கோலும் இருந்தன. மண்டபத்தில் நாலாபுறமும் தீபங்கள் எரிந்தன. தீபச்சுடரின் ஒளியில் தங்கச் சிங்காதனமும் மணி மகுடமும் உடை வாளும் ஜொலித்துத் திகழ்ந்தன.

இளவரசர் முதலியோர் அந்த மண்டபத்துக்குள் நுழைந்ததும் பிக்ஷுக்கள் அனைவரும் எழுந்து நின்று, "புத்தர் வாழ்க" "தர்மம் வாழ்க" "சங்கம் வாழ்க" என்று கோஷித்தார்கள்.

இளவரசர் மகா தேரோ குருவின் சமீபம் வந்து வணங்கி நின்றார்.

பிக்ஷுக்களின் அத்தியட்சகர் சிங்காதனத்துக்கு அருகில் கிடந்த ஒரு சாதாரண பீடத்தைச் சுட்டிக்காட்டி, அதில் அமரும்படி இளவரசரை வேண்டினார்.

"மகா குருவே! இச்சிறுவனுக்கு முன்னால் பிராயத்திலும் தர்மத்திலும் மூத்தவர்களாகிய தாங்கள் அமர வேண்டும்" என்று வேண்டினார் இளவரசர்.

அத்தியட்சக மகா குரு தமது பீடத்தில் அமர்ந்ததும் இளவரசரும் தமக்கென்று குறிப்பிட்ட ஆசனத்தில் பணிவுடன் உட்கார்ந்தார்.

"தேவர்களின் அன்புக்குரிய இளவரசரே! தங்கள் வருகையினால் இந்த மகா போதி சங்கம் மிக்க மகிழ்ச்சி அடைந்திருக்கிறது. நாங்கள் குறிப்பிட்ட நிபந்தனைகளை யெல்லாம் ஒப்புக்கொண்டு பல சிரமங்களுக்கு உட்பட்டு வந்திருக்கிறீர்கள். புத்த பகவானுடைய கருணை தங்களிடம் பூரணமாக இருப்பதற்கு வேறு அத்தாட்சி தேவையில்லை!" — இவ்விதம் பாலி பாஷையில் பெரிய குரு கூற, இளவரசரை அழைத்து வந்த பிக்ஷு தமிழில் மொழிபெயர்த்துச் சொன்னார். மற்ற பிக்ஷுக்கள், "சாது! சாது!" என்று கோஷித்துத் தங்கள் சந்தோஷத்தை வெளியிட்டார்கள்.

மகா தேரோ மேலும் கூறலுற்றார்:— "இலங்கைத் தீவுக்குப் புத்த தர்மத்தை அனுப்பிய பாரத வர்ஷத்துக்கு நாங்கள் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறோம். ஆனால் ஆதிநாளிலிருந்து உங்கள் நாட்டிலிருந்து படையெடுத்து வந்த சோழர்கள், பாண்டியர்கள், மலையாளத்தார், கலிங்கத்தார் எல்லாரும் இங்கே பல அட்டூழியங்களைச் செய்ததுண்டு. புத்த விஹாரங்களையும் பிக்ஷுக்களின் மடாலயங்களையும் குருகுலங்களையும் அவர்கள் இடித்துத் தள்ளி தேவர்களின் சாபத்துக்கு ஆளானார்கள். உங்கள் நாட்டவரைச் சொல்வானேன்? இந்த நாட்டின் மன்னர்களே அத்தகைய கோர கிருத்யங்களைச் செய்திருக்கிறார்கள். புத்த சங்கத்தில் பிரிவினையை ஏற்படுத்தினார்கள். தங்களுடைய தீய செயல்களை எதிர்த்த பிக்ஷுக்களின் விஹாரங்களை இடித்தார்கள்; அக்கினிக்கு இரையாக்கினார்கள். இரண்டு காத நீளமும் ஒரு காதம் அகலமும் உள்ள இந்த விசாலமான புண்ணிய நகரத்தில் ஒரு சமயம் பாதி விஸ்தீரணத்தில் புத்த விஹாரங்கள் இருந்தன. அவற்றில் பெரும் பகுதி இன்று இடிந்து பாழாய்க் கிடக்கின்றன. இடிந்த விஹாரங்களைப் பழுது பார்த்துச் செப்பனிட்டுக் கொடுக்க வேண்டும் என்று இதுவரை எந்த அரச குலத்தினரும் கட்டளையிட்டதில்லை. அத்தகைய ஆக்ஞை பிறப்பிக்கும் பாக்கியம் இளவரசர் அருள்மொழிவர்மருக்கே கிடைத்தது. தேவர்களுக்கு உகந்தவரே! தங்களுடைய இந்தச் செய்கையைப் புத்த மகாசங்கம் பெரிதும் பாராட்டுகிறது...."

இளவரசர் தலை வணங்கி மகா தேரோவின் வாழ்த்தை ஏற்றுக் கொண்டார்.

"இன்னும், இந்தப் புராதன புண்ணிய நகரத்தில் வெகு காலமாகப் பெரஹரா உற்சவம் நடைபெறாமல் தடைப்



குதுப்மினாரைக் கொண்டுபோய் ஒரு மலைக்குப் பக்கத்தில் வைத்தால் எப்படி இருக்கும்?

40ம் பக்கம் பார்க்க.

பட்டிருந்தது. நூறு ஆண்டுகளுக்கு முன்னால் பாண்டியர்கள் ஒரு சமயம் இந்த மாநகரத்தைப் பிடித்தார்கள். அப்போது இலங்கை அரச குலத்தார் புலஸ்திய நகரம் சென்றார்கள். அது முதல் இங்கே பெரஹரா த் திருவிழா நடைபெற்றதில்லை. இந்தப் புண்ணிய வருஷத்தில் தாங்கள் அவ்வுற்சவம் மீண்டும் நடைபெறலாம் என்று கட்டளை யிட்டீர்கள். அதற்கு வேண்டிய வசதியும் அளித்தீர்கள். இது பற்றியும் புத்த சங்கத்தார் சந்தோஷமடைந்திருக்கிறார்கள்....''

இளவரசர் மீண்டும் சிரம் வணங்கி, ''மகாகுருவே! அடியேன் புத்த சங்கத்தாருக்கு இன்னும் ஏதேனும் சேவை செய்யக் கூடியதாக இருந்தால் கருணை கூர்ந்து பணித்தருள்க!'' என்றார்.

அத்தியட்சகர் புன்னகை புரிந்து, ''ஆம், இளவரசரே! புத்த சங்கம் மேலும் தங்களுடைய சேவையை நம்பிக்கையுடன் எதிர்பார்க்கிறது. அதற்கு முன்னதாக, இன்னும் சில வார்த்தைகள் கூற வேண்டும். புத்த பகவான் கடைசித் திரு அவதாரத்துக்கு முன்னால் வேறு பல அவதாரங்களில் தோன்றியதாக அறிந்திருப்பீர்கள். ஒரு சமயம் சிபிச் சக்கரவர்த்தியாக அவதரித்துக் கொடுமை நிறைந்த இந்த உலகத்தில் ஜீவகாருண்யத்தின் பெருமையை உணர்த்தினார். ஒரு சிறிய புறாவின் உயிரைக் காப்பாற்றும் பொருட்டுத் தமது திருமேனியின் சதையைத் துண்டு துண்டாக அவர் அரிந்து துலாக் கோலில் இட்டார். அந்தச் சிபிச் சக்கரவர்த்தியின் வம்சத்திலே வந்தவர்கள் என்று சோழ குலத்தவராகிய நீங்கள் சொல்லிக் கொள்கிறீர்கள். சிபியின் வம்சத்தில் வந்த காரணம் பற்றிச் 'செம்பியன்' என்ற பட்டப் பெயரும் சூடிக் கொள்கிறீர்கள். ஆனால் இது வரையில் புத்த சங்கத்தார் அதை நம்பவில்லை. சோழ குலத்துப் புரோகிதர்கள் கட்டிய கதை என்றுதான் எண்ணியிருந்தார்கள். இன்று — தங்களுடைய அரும் பெரும் செயல்களைப் பார்த்த பிறகு, — சிபிச் சக்கரவர்த்தியின் பரம்பரையில் வந்தவர்கள் சோழர்கள் என்று ஒப்புக் கொள்ள வேண்டி வருகிறது. புத்த பகவானுடைய பெருங் கருணையை மாயை காரணமாக இது காறும் சோழ குலம் மறந்திருந்தது. அந்தக் கருணையை இன்றைய தினம் தங்கள் மீது ஆவிர்ப்பவித்திருக்கிறது. அதற்கான தேவ சூசகமும் கிடைத்திருக்கிறது. இதோ!....'' என்று கூறி அத்தியட்சக தேரோ பின்னால் திரும்பிப் பார்த்ததும், பிக்ஷுக்கள் சிலர் பீடம் ஒன்றில் சாய்ந்து படுத்திருந்த மற்றொரு பிக்ஷுவைப் பீடத்துடன் தூக்கிக் கொண்டு வந்தார்கள். அந்தப் பிக்ஷுவின் உடம்பெல்லாம் இடைவிடாமல் நடுங்கிக் கொண்டிருந்தது. கைகள் வெடவெட வென்று நடுங்கின; கால்கள் நடுங்கின; உடம்பு நடுங்கிற்று; தலை ஆடிற்று; பற்கள் கிட்டின; உதடுகள் துடித்தன; சிவந்த கண்களுக்கு மேலே புருவங்களும் அசைந்தன.

''இந்தப் பிக்ஷுவின் பேரில் முப்பத்து முக்கோடி தேவர்களும் ஆவிர்ப்பவித்திருக்கிறார்கள். தேவர்கள் கருணை கூர்ந்து சொல்வதைக் கேட்டுக் கொள்ளுங்கள்!'' என்றார் மகா தேரோ.

ஆவேசங் கொண்டிருந்த புத்த பிக்ஷுவின் வாயிலிருந்து நடு நடுங்கிக் குளறிய குரலில் ஏதேதோ மொழிகள் அதிவிரைவாக வந்தன. அவர் பேசி நிறுத்தியதும் அத்தியட்சக குரு கூறினார்: ''முப்பத்து முக்கோடி தேவர்

களும் தங்களை ஆசிர்வதிக்கிறார்கள். மூற்காலத்தில் தேவனாம்பிரிய அசோக வர்த்தனர் பாரத பூமியை ஒரு குடையில் ஆண்டு புத்த தர்மத்தை உலகமெல்லாம் பரப்பினார். அந்த கைய மகா சாம்ராஜ்யத்துக்குத் தாங்கள் அதிபதியாவீர்கள் என்று தேவர்கள் ஆசிர்வதிக்கிறார்கள். அசோகரைப் போல் தாங்களும் புத்த தர்மத்தை உலகில் பரப்ப வேண்டும் என்று விரும்புகிறார்கள். அசோகர் பாடலீபுத்திரச் சிம்மாசனத்தில் வீற்றிருந்து செய்த தர்மப் பெரும் பணிகளைத் தாங்கள் இந்தத் தொன்மை மிக்க அநுராதபுரத்தில் ஆரம்பித்து நடத்த வேண்டும் என்று கட்டளையிடுகிறார்கள். இளவரசே! தேவர்களுடைய கட்டளைக்குத் தங்கள் மறுமொழி என்ன?''

இதைக் கேட்டதும் இளவரசர், ''மகாகுரு! தேவர்கள் சக்தி வாய்ந்தவர்கள். அவர்கள் சித்தப்படி நடத்திக் கொள்வார்கள். ஆனால் அடியேனுக்கு இப்போது அவர்கள் இடும் பணி யாது என்று விளங்கவில்லையே?'' என்றார்.

''அதை நானே தெரிவிக்கிறேன்'' என்று அத்தியட்சக தேரோ கூறிச் சமிக்ஞை செய்ததும், ஆவேசம் வந்திருந்த பிக்ஷுவை அப்பால் எடுத்துச் சென்றார்கள். பின்னர் பிக்ஷுத் தலைவர் கூறினார்: ''இளவரசே! இதோ உங்கள் முன்னால் உள்ள சிங்காதனத்தைப் பாருங்கள். மணி மகுடத்தைப் பாருங்கள். செங்கோலையும் பாருங்கள். இலங்கை இராஜ வம்சத்தைச் சேர்ந்த மன்னர்கள் அனைவரும் இந்தச் சிங்காதனத்தில் அமர்ந்து, இந்த மணிமகுடத்தை அணிந்து, இந்தச் செங்கோலைக் கையில் தரித்த பிறகே, புத்த சங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட அரசர்களானார்கள். துஷ்டகமனு சக்கரவர்த்தியும் தேவனாம்பிரிய திஸ்ஸரும் மகாசேனரும் அமர்ந்து முடிசூடிய சிங்காதனம் இது! அவர்கள் சிரசில் தரித்த கிரீடம் இது: அவர்கள் கரத்தில் ஏந்திய செங்கோல் இது. இப்படிப்பட்ட புராதன சிங்காதனம்,—ஆயிரம் ஆண்டுகளாக அரசர்களைச் சிருஷ்டித்த சிங்காதனம், — இதோ தங்களுக்காகக் காத்திருக்கிறது. இதில் அமரவும் இந்த மணிமகுடமும் செங்கோலும் தரிக்கவும் தங்களுக்குச் சம்மதமா?''

இதையெல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த வந்தியத்தேவன் மிக்க பரபரப்பை அடைந்தான். இளவரசரைத் தூக்கி அந்தச் சிம்மாசனத்தில் அந்தக் கணமே உட்கார வைத்துவிட்டால் என்ன என்று எண்ணினான். ஆனால் இளவரசருடைய முகபாவத்தில் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை.

முன்போலவே அமைதியான குரலில், ''அத்தியட்சகா! அது எப்படிச் சாத்தியம்? இந்தச் சிங்காதனத்தில் ஏறி முடிசூடிய மகிந்த மன்னர் இன்னும் ஜீவியவந்தராக இருக்கிறாரே? அவர் இருக்குமிடம் தெரியாவிட்டாலும்...'' என்று கூறி நிறுத்தினார்.

''இளவரசே! இலங்கை இராஜ வம்சம் மாற வேண்டும் என்பது தேவர்களின் கட்டளை. அது நடந்தே தீரும். கங்கை பாயும் வங்க நாட்டிலிருந்து வந்த விஜயராஜன் ஸ்தாபித்த இந்த வம்சத்தில் எத்தனையோ மகாராஜர்கள் தோன்றினார்கள்; தர்மத்தையும் பரிபாலித்தார்கள். ஆனால் பிற்காலத்தில் இந்த வம்சம் பல கொடிய கிருத்யங்களைச் செய்து தேவசாபத்துக்கு ஆளாகி விட்டது. இந்த வம்சத்தில் பிறந்தவர்களிலே தகப்பன் மகனைக் கொன்றான்; மகன் தகப்பனைக் கொன்றான்; அண்ணனைத் தம்பி கொன்றான்; தம்பியை அண்ணன் கொன்றான்; தாய் மகனைக் கொன்றாள்; மருமகள் மாமியாரைக் கொன்றாள். இத்தகைய மகா பாதகங்களைச் செய்த வம்சத்தவர்கள் புத்த தர்மத்தைப் பரிபாலிக்கத் தகுதி வாய்ந்தவர்கள் அல்ல என்று தேவர்கள் கட்டளையிடுகிறார்கள். கடைசியாக முடிசூடிய மகிந்தன் இலங்கைச் சிம்மாதனத்துக்கு உரிமையை இழந்துவிட்டான். அவனுக்குச் சந்ததியும் இல்லை. ஆகையால் இராஜ வம்சம் எப்படியேனும் மாறியே தீர வேண்டும். அப்படி இராஜ வம்சம் மாறும்போது புதிய வம்சத்தின் முதல்வனைத் தெரிந்தெடுக்கும் உரிமை இந்தச் சங்கத்துக்கு உண்டு. இந்தச் சங்கத்தாரும் தங்களைத் தெரிந்தெடுக்க விரும்புகிறார்கள். தாங்கள் சம்மதம் கொடுத்தால் இன்று இரவே முடிசூட்டு விழா நடத்தி விடலாம்.....''

அந்த மண்டபத்தில் சிறிது நேரம் பூகர்ப்பத்திலும் கடலின் ஆழத்திலும் குடிகொண்டிருப்பது போன்ற நிசப்தம் குடிகொண்டிருந்தது. வந்தியத்தேவனுடைய பரபரப்பு உச்ச நிலையை அடைந்து விட்டது.

அச்சமயத்தில் பொன்னியின் செல்வர் தமது பீடத்திலிருந்து எழுந்து புத்த பிக்ஷுக்களின் சங்கத்துக்கு வணக்கம் செலுத்தினார். வந்தியத்தேவன் குதூகலத்தின் எல்லையை அடைந்தான். இளவரசர் சிம்மாசனத்தில்

அமர்ந்ததும் மணிமகுடத்தை எடுத்துத் தானே சூட்டி விடலாம் என்று ஆத்திரப்பட்டான்.

இளவரசர் கூறினர்: "மகான்களே! உங்களை நமஸ்கரிக்கிறேன். இந்தச் சிறுவனிடம் எல்லையில்லா அன்பும் நம்பிக்கையும் வைத்து இந்தப் புராதன சிங்காதனத்தை அளிக்க முன்வந்த உங்கள் பெருந்தன்மையைப் போற்றி வணங்குகிறேன். ஆனல் தாங்கள் இப்போது இடும் பணி என் சக்திக்கு அப்பாற்பட்டது. நான் சோழ நாட்டில் பிறந்து வளர்ந்தவன். அந்த நாட்டு நிலங்கள் தந்த உணவும் நதிகள் அளித்த நீரும் இந்த உடலை ஆக்கின. என் தந்தை சுந்தர சோழ சக்கரவர்த்தியின் கட்டளைக்கு உட்பட்டு இங்கே வந்தேன். அவருடைய விருப்பத்தை அறியாமல் எதுவும் என்னல் செய்ய இயலாது...."

பிக்ஷு குறுக்கிட்டுக் கூறினர்: "இளவரசே! தங்கள் தந்தை சுந்தர சோழர் இன்று சுதந்திரமின்றிச் சிறையில் இருப்பதுபோல் இருப்பதை நீர் அறியீரா ?...."

"ஆம்; என் தந்தை நோய்வாய்ப் பட்டுப் படுத்த படுக்கையில் இருக்கிறர். கால்களின் சுவாதீனத்தை இழந்திருக்கிறர். ஆயினும் அவருடைய பெயரால், — அவரிடம் அதிகாரம் பெற்று, — சோழ நாட்டை ஆளுவோரின் கட்டளைக்கு நான் உட்பட்டவன். அவர்களுடைய கட்டளையின்றி நான் இந்தச் சிங்காதனத்தை ஏற்றுக் கொண்டால் தேசத் துரோகியும் ஆவேன்...."

"அவ்வாறு தாங்கள் கருதுவதாயிருந்தால் தஞ்சாவூருக்குத் தூது கோஷ்டி ஒன்றை அனுப்பச் சித்தமாயிருக்கிறேம். தங்கள் தந்தையார் புத்த தர்மத்தில் மிகப் பற்றுக்கொண்டவர். எங்கள் வேண்டுகோளை நிராகரிக்க மாட்டார்....."

"இந்த நாட்டின் பிரஜைகள் இருக்கிறர்கள். அவர்களுடைய சம்மதமின்றி இராஜ்யத்தை விநியோகிக்க யாருக்கு உரிமை உண்டு ?"

"தங்களை அரசராகப் பெறுவதைப் பெறற்கரிய பேருக இந்நாட்டுப் பிரஜைகள் கருதுவார்கள்."

"எல்லாரும் சம்மதிக்கலாம்; மகிழ்ச்சியும் அடையலாம். இந்த உலகில் வேறு யாருடைய விருப்பத்தையும் காட்டிலும் நான் அதிகமாக மதிப்பது என் தமக்கையாரின் விருப்பத்தையே. என் அன்னை என்னைப் பெற்ருள்; பொன்னி நதி என் உயிரைக் காப்பாற்றி அளித்தாள். ஆனல் என் தமக்கை என் அறிவை வளர்த்து அகக் கண்களைத் திறந்தார். அப்படிப் பட்டவருடைய விருப்பத்தைக் காட்டிலும் என் உள்ளத்திலே உள்ள ஒரு குரலின் கட்டளையே எனக்கு மேலானது. மகா புருஷர்களே! தாங்கள் இச்சிறுவனுக்கு மனமுவந்து அளிக்கும் மகாபாக்கியத்தை ஏற்றுக் கொள்ளும் படி என் உள்ளக் குரல் எனக்குச் சொல்லவில்லை! தயவுசெய்து இச் சிறுவனை மன்னித்து அருளுங்கள்!...."

மறுபடியும் அந்த மகாசபையில் சிறிது நேரம் மௌனம் குடிகொண்டிருந்தது. வந்தியத்தேவனுடைய நாடி நரம்புகள் படபடவென்று துடித்த சத்தம் அவன் காதில்மட்டும் விழுந்தது.

**ச**ற்றுப் பொறுத்து, பிக்ஷு சங்கத்தின் அத்தியட்சகர் கூறினர்: "இளவரசே! தாங்கள் கூறிய மறுமொழி எனக்கு அதிக வியப்பை அளிக்கவில்லை. ஒருவாறு எதிர்பார்த்தேன். இதனலேயே இந்த இலங்கைச் சிங்காதனத்தில் ஏற எவரிலும் அதிக தகுதி வாய்ந்தவர் தாங்கள் என்று ஏற்படுகிறது. தர்ம சூக்ஷ்மத்தை உணர்ந்த எங்களுக்கு இதைப் பற்றிச் சிறிதும் சந்தேகம் கிடையாது. ஆனல் தங்களை வற்புறுத்தவும் விரும்பவில்லை. யோசிப்பதற்கு அவகாசம் கொடுக்கிறேம். ஓராண்டுக்குப் பிறகு இதே மாதிரி ஒரு நாள் தங்களுக்குச் சொல்லி அனுப்புகிறேம். அப்போது வந்து தங்கள் முடிவான கருத்தைத் தெரிவிப்பீராக!.... ஒரு விஷயம் மட்டும் நினைவிருக்கட்டும். இந்தப் புராதன அநுராதபுரத்தில் பல புத்த விஹாரங்கள் மூர்க்கமான யுத்தக் கொடுமையினல் பாழாய்ப் போயிருக்கின்றன. ஆனல் இந்த மகா போதி விஹாரத்துக்கு மட்டும் எவ்விதச் சேதமும் இதுவரை ஏற்படவில்லை. ஏனெனில் இது பூமிக்குக் கீழே குடைந்து எடுத்த விஹாரம். இங்கே வரும் வழி இவ்விடத்தில் தற்சமயம் கூடியிருக்கும் புத்த சங்கத் தலைவர்களுக்கு மட்டுமே தெரியும். எங்களில் ஒருவர் வழி காட்டாமல் இங்கே யாரும் வர முடியாது. இலங்கை மன்னர்கள் தங்கள் வாழ்க்கையில் ஒரு தடவை, புத்த சங்கத்தாரால் முடிசூடிக் கொள்வதற்கு மட்டுமே, இங்கு அழைக்கப்படுவார்கள். அத்தகைய புனிதமான இரகசியப் பாதையுள்ள விஹாரம் இது. இங்கே தாங்கள் வந்தது, போனது, இங்கே நடந்தது எதையும் பற்றி வெளியில் யாருக்கும் சொல்லக் கூடாது. தங்களுடைய

நண்பர்களும் சொல்லக் கூடாது. சொன்னால் மிகக் கடுமையான தேவ சாபத்துக்கு உள்ளாகும்படி நேரிடும்!''

''அத்தியட்சக! சாபத்துக்குத் தேவையில்லை; வெளியில் யாருக்கும் சொல்வதில்லையென்று வாக்குக் கொடுத்துவிட்டுத்தான் இங்கே என் நண்பர்களையும் அழைத்துக் கொண்டு வந்தேன். கொடுத்த வாக்கை ஒரு நாளும் மீற மாட்டேன்'' என்றார் பொன்னியின் செல்வர்.

* * *

அரை நாழிகை நேரத்துக்குப் பிறகு இளவரசர் அருள்மொழி வர்மரும் ஆழ்வார்க்கடியானும் வந்தியத்தேவனும் அநுராதபுரத்தின் வீதியில் நிலா வெளிச்சத்தில் நடந்து கொண்டிருந்தார்கள். விஹாரத்துக்குள் இருந்த வரையில் வாயைக் கெட்டியாக மூடி வைத்துக் கொண்டிருந்த வந்தியத்தேவன் இப்போது அடக்கி வைத்திருந்த எண்ணங்களையெல்லாம் அவிழ்த்து விட்டான்.

''சோழ நாடு நீர் வளம் நில வளம் பொருந்தியதுதான். ஆனாலும் இந்த இலங்கைக்கு இணையாகாது. இப்படிப்பட்ட இரத்தினத் தீவின் சிம்மாசனம் வலிய வந்ததை உதைத்துத் தள்ளிவிட்டீர்களே? இது என்ன பேதைமை? தங்களை அழைத்து மணி மகுடத்தை வழங்க வந்த பிக்ஷுக்களின் மதியை என்னவென்று சொல்ல? அடுத்தாற்போல், நானும் தூணோடு தூணாக நின்று கொண்டிருந்தேனே? எனக்குக் கொடுத்திருக்கக் கூடாதா?'' என்று இப்படியெல்லாம் பொருமிக் கொட்டிக் கொண்டிருந்தான்.

இளவரசர் அவனைச் சமாதானப்படுத்த முயன்றார். ''துஷ்ட கமனுவின் மகன் ஸாலி, அசோகமாலா என்னும் பெண்ணின் காதலுக்காக இந்த இலங்கை இராஜ்யத்தைத் துறந்தானென்று சொன்னேனே? அது உமது காதில் ஏறவில்லையா?'' என்றார்.

''எல்லாம் ஏறிற்று. அப்படித் தாங்கள் எந்தப் பெண்ணைக் காதலிக்கிறீர்கள்? அவ்விதம் தாங்கள் சிம்மாசனம் ஏறுவதற்குக் குறுக்கே நிற்கும் பெண் யார்?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''ஒரு பெண் அல்ல; இரண்டு பெண்கள். சத்தியம், தர்மம் என்னும் இரு பெண்களை நான் காதலிக்கிறேன். அவர்களுக்காகவே இலங்கை மணி மகுடத்தை வேண்டாம் என்றேன்.''

''இளவரசே! தங்களைப் பார்த்தால் இளம் பிராயத்தினராகக் காணப்படுகிறது. பேச்சோ, வயதான கிழவரைப் போல் பேசுகிறீர்கள்.''

''நம்மில் யார் வயதானவர், யாருடைய பிராயம் முடியப் போகிறது என்பது யாருக்குத் தெரியும்?''

இப்படி அவர்கள் பேசிய போது வீதியின் ஓரமாக ஒரு பழைய மாளிகையின் சமீபம் போய்க் கொண்டிருந்தார்கள்.

வீதிக்கு எதிர்ப்புறத்தில் யாரோ கையைத் தட்டும் சத்தம் கேட்டது.

சத்தம் கேட்ட இடத்தில் ஓர் உருவம் நின்று கொண்டிருந்தது.

''இப்படி வாருங்கள்!'' என்று கூறி, இளவரசர் அந்த உருவத்தை நோக்கி வீதியைக் கடந்து போனார்.

மற்றவர்களும் தொடர்ந்து போனார்கள்.

அவர்கள் பாதி வீதியைக் கடந்து கொண்டிருந்த போது பின்னால் பெரிய தடபுடல் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தார்கள். அவர்கள் எந்த வீட்டின் ஓரமாகப் போய்க் கொண்டிருந்தார்களோ அதன் மேல் மாடத்தின் முகப்பு இடிந்து விழுந்து கொண்டிருந்தது!

அவர்கள் அங்கே வீதியைக் கடக்கத் திரும்பி யிராவிட்டால் அது அவர்கள் தலை மேலே விழுந்து கொன்றிருக்கும்!

ஒரு கணநேர வித்தியாசத்தில் மூன்று உயிர்கள் பிழைத்தன! அதுவும் எப்பேர்ப்பட்ட உயிர்கள்!

''நம்மில் யாருக்குப் பிராயம் முடியப் போகிறது என்று யாருக்குத் தெரியும்?' என்று பொன்னியின்செல்வர் கூறியது எவ்வளவு உண்மையான வார்த்தை?'

இப்படி எண்ணி வந்தியத்தேவன் நடு வீதியில் நின்று பார்த்துக் கொண்டிருக்க, மற்ற இருவரும் அப்பால் சென்றார்கள்.

வந்தியத்தேவன் அவர்களை மறுபடியும் அணுகிய போது அங்கே நின்ற உருவம் நிலா வெளிச்சத்தில் நன்கு தெரிந்தது.

கண் முன்னே காண்பதை நம்புவதா, இல்லையா என்ற சந்தேகம் அச்சமயம் அவனுக்கு உண்டாயிற்று.

இது என்ன பைத்தியக்காரத்தனம்? இது எப்படிச் சாத்தியமாகும்?

தஞ்சையில் பழுவேட்டரையர் அரண்மனையில் பார்த்த நந்தினி இங்கே இந்த அநுராதபுரத்து வீதிக்கு எப்படி வந்திருக்க முடியும்? நள்ளிரவில் இங்கே வந்து எதற்காக நிற்க வேண்டும்! மறுகணம் அந்த உருவம் மாயமாய் மறைந்தது. மற்ற இருவர் மட்டும் நின்றார்கள்.

(தொடரும்)

சந்தன மண்டலத்துள்
அந்தரங்க வரவேற்பு !

தூய சந்தனத்தின்
**புது** மணங் கமழ்

# மகாராணி




**மகாராணி** : பேரரசி போன்ற மென்மை யழகுற உங்கள் மேனியைப் பேணும் சோப்

லின்டாஸ்-MHR.4.140 TM

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு

# துள்ளும் குழந்தைகள் நன்கு வளர்ந்திட
# ருசித்துப் பருகட்டும் போர்ன்விடா!

ஓடி விளையாடும் குழந்தைகளுக்கு தினசரி உணவிலிருந்து கிடைக்கும் சக்தி போதுவதில்லை. எவ்வளவு சீக்கிரம் அவர்களுக்கு சக்தி கிடைக்கிறதோ அதே வேகத்தில் அது பள்ளிக்கூடத்திலும், விளையாடும் போதும் செலவழிந்து விடுகிறது. இழக்கும் சக்தியை மீட்டுத் தந்து குழந்தைகளைத் துள்ளும் ஆரோக்கியத்துடன் வளர்க்க, தினமும் ஒரு கப் போர்ன்விடா கொடுங்கள். தம் மக்கள் நலம் கருதும் தாய்மார்கள் அனைவரும் இதை ஆமோதிப்பார்களே!

பால், சர்க்கரை, மால்ட், கோகோ இவையாவும் திட்டமாகக் கலக்கப்பட்டதும், போஷாக்குச் சத்து நிறைந்ததுமான ஒரு இனிய பானம் போர்ன்விடா. ஆம், இது ஒரு காட்பரீஸ் தயாரிப்பு!






**சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்**

**காட்பரீஸ் போர்ன்விடா.**

Bensons/1039/TAM

(அருண் அந்தச் சாத்துக்குடிப் பழத்தை இடது கையால் வெட்டுகிறாரோ என்று உன்னிப் பாய்க் கவனித்த லாரன்ஸ் ஏமாற்றத் துக்கு உள்ளாகிறார்.)

**லாரன்ஸ்:** பார்த்து, பார்த்து! கத்தி. அரிவாளையெல்லாம் கவனமா கையாளணும்.

(பதில் பேசாது காரியத்தில் கண்ணாயிருக்கிறார் அருண். ஆனால் அவர் பார்வை லாரன்ஸ் மீது லயித்துள்ளது. பழத்தை வலக் கையாலேயே இறுகி கோப்பையில் சாற் றைப் பிழிகிறார்.)

**லாரன்ஸ்:** அடேயப்பா! எவ்வளவு உறுதியான கை! உங்க இரும்புக் கையிலே மாட்டிக்கிட்டு இந்த ஆரஞ்சுப் பழம் பட்ட பாட்டைப் பார்த்தால்... ஒரு வேளை இதுவே யார் கழுத்தாகவோ மட்டும் இருந் துட்டால் அவன் பிராணன் பரலோகத் துக்குப் பாதி தூரம் பயணமாகியிருக்கும்! சக்கையாப் பிழிஞ்சுட்டீங்களே!... ஆமாம், இப்போ உங்களுக்கு என்ன வயசிருக்கும்?

**அருண்:** கிட்டத்தட்ட உங்க வயசுதான் இருக்கும்!

**லாரன்ஸ்** (பழ ரசத்தை அருந்தியபடி): இன்னைக்குக் காலையிலேதான் சர்ச்சிலே உங்களைப் பற்றி நினைச்சேன்.

**அருண்:** ஏன் இன்ஸ்பெக்டர்? எதற்காக?

**லாரன்ஸ்:** 'I am the resurrection and the life sayeth The Lord' — பைபிளில் இந்த




வரியைப் படிச்சவுடனே உங்க ஞாபகந்தான் வந்தது.

**அருண்:** என்ன சொல்றீங்க?

**லாரன்ஸ்:** இருபது வருஷங்களுக்கு முந்தி மறைந்த ஒரு மனிதன் மறுபிறப்பெடுத்து வந்ததாக ஊரிலே எல்லோரும் பேசிக் கிறாங்க. உங்க வாழ்க்கையே ஒரு resurrection ஆகத்தான் இருக்கணும். அடைக்கலம் பாதிரியாரோட மறுபிறப்பே நீங்கன்னுதான் நினைக்கத் தோணுது.

(அருண் பதற்றமின்றி மெல்ல நகர்கிறார். மேஜையில் கிடந்த ஒரு புத்தகத்தைப்






பார்த்த வாரன்ஸ் அதை எடுத்துத் தலைப்பைப் படிக்கிறார்.)

**வாரன்ஸ் :** **The Kingdom of God is within you.**

**அருண் :** எனக்கு ரொம்பப் பிடிச்ச புத்தகம்.

**வாரன்ஸ்:** டால்ஸ்டாய் எழுதிய இது. காந்திக்கு ரொம்பப் பிடிச்ச புத்தகம் ! உங்களுக்குமா ?

**அருண்:** மிஸ்டர் வாரன்ஸ்! உங்களை ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன்! காந்தியை விட வினோபா பாவே பூதானத் துறையில் அதிக சேவை செய்திருக்கிறார்; காந்தியை விட இலக்கியத் துறையில் ரவீந்திரநாத் தாகூர் சிறந்து விளங்கியிருக்கிறார்; காந்தியை விட அறிவாளி ராஜாஜி; காந்தியைக் காட்டிலும் உறுதி வாய்ந்தவர் படேல்; காந்தியைக் காட்டிலும் சோஷலிஸத்தில் தீவிரமாக இருந்தவர் ஜவாஹர்லால் நேரு. இருந்தும் காந்தி ஒருத்தரைத்தான் 'மகாத்மா'ன்னு சொல்றோம். ஏன் தெரியுமா...? நானே பதில் சொல்றேன் !

அவருடைய சத்திய சோதனை ! மனிதன் தவறுகள் செய்யாத வரையில் மனிதனாக இருக்கிறான். தவறுகள் செய்யும் போது மிருகமாகிறான். செய்த தவற்றை உணர்ந்து திருந்தும் போது அதே மனிதன் தெய்வமாகிறான்..... காந்தி சொல்லாத ஒன்றை நான் சொல்லப் பிரியப்படறேன். மனிதன் தெரியாமல் தவறு செய்யும்போது குழந்தையாகிறான்! தவறு இழைப்பது மனிதத்தன்மை; மன்னிப்பது தெய்விகத்தன்மை !

**வாரன்ஸ்:** தவறு செய்வது சகஜந்தான். ஆனால் சகஜமாகத் தப்பு செய்கிறவன் குற்றவாளி! அருண்! நீ இந்த நிமிஷத்தில் ஜெயித்து விடலாம். ஆனால் எப்போதுமே வெற்றி உன் பக்கம் இருக்கும்னு நினைக்காதே! அந்தக் காந்தி சொன்ன இன்னொரு பொன்மொழி என்ன தெரியுமா ? 'வண்டி வண்டியாகப் போதனைகளைச் செய்வதைவிட அவற்றில் ஒரு சிறு பகுதியையேனும் வாழ்க்கையில் கடைப்பிடிப்பது சிறந்தது !' சொல்லுக்கும், செயலுக்கும் தொடர்பு இருக்கணுமே, அருண் ! பாடுபவன் நீதான்! ஆனால் பாட்டு ? அது சர்வ வல்லமை படைத்த ஆண்டவன் எழுதியது! **You are the singer, not the song!** கேள்விப்பட்டதில்லையா?

(அருணையே உற்றுப் பார்க்கிறார் வாரன்ஸ்.)

**அருண்:** என்ன இன்ஸ்பெக்டர் அப்படிப் பார்க்கிறீங்க ?

**லாரன்ஸ்:** உங்க கறுப்புக் கண்ணாடி ரொம்ப நல்லாயிருக்கே? 'ரேபான்' தயாரிப்பா அது?

(பேசியபடியே கண்ணாடியை விருட்டென்று கழற்றி விடுகிறார் லாரன்ஸ். அருணுடைய கண்களை உற்றுப் பார்க்கிறார், அந்தோணிக்கு ஒரு கண் பார்வை இல்லை என்பதால்.)

**அருண் :** கண்ணாடியைப் பார்க்கிறேன்னுட்டுக் கண்களையே பார்த்தா எப்படி?

**லாரன்ஸ்:** உங்க ரெண்டு கண்களுக்கும் இடையில் வித்தியாசமிருக்கே?

**அருண்:** பார்க்கிறவங்க பார்வையைப் பொறுத்தது அது ! இன்ஸ்பெக்டர், நீங்க நினைப்பது சரிதான்! என்னுடைய இடது கண் செயற்கையாகப் பொருத்தப்பட்டது தான்.

**லாரன்ஸ்:** அதானே, துடிப்பே இல்லையே!

**அருண் :** இதயத்திலே இருக்கே ! "கண்ணிலே இல்லா விட்டால் பரவாயில்லை, இன்ஸ்பெக்டர் !

(கண்ணாடியை வாங்கிப் போட்டுக் கொள்கிறார் அருண்.)

**அருண் :** மிஸ்டர் லாரன்ஸ் ! அனுமானமா நமக்குச் சரின்னு படற பல விஷயங்களைச் சாட்சியங்களோடு நிரூபிக்க முடியறதில்லே, அப்படித்தானே !

**லாரன்ஸ் :** எப்பவுமே அதே நிலைமை நீடிக்காது, அருண் !

**அருண்:** ஆமாம், உங்க நெற்றியிலே என்ன தழும்பு ?

**லாரன்ஸ்** (அந்தோணி மொழுகுவர்த்தி ஸ்டாண்டினால் அடித்ததை நினைவுபடுத்திக் கொண்டு) : எப்பவோ அடிபட்ட தழும்பு! காயம் ஆறிடுச்சு. ஆறா நினைவு ஆறலே!

**அருண்:** ஓஹோ !

**லாரன்ஸ்:** நான் உங்களைப் பார்க்க வந்ததே வேறே விஷயம். என் மகளுடைய கல்யாணத்துக்கு அழைக்கத்தான் வந்தேன்! அது சரி, உங்க வீட்டு நம்பரென்ன ?

**அருண்** (புன்னகையுடன்): one by ninety-nine (1/99.)

**லாரன்ஸ்** (அந்தோணி கைதியாக இருந்த போது அவனுக்கு இருந்த எண்ணை நினைவு படுத்தும்விதமாக): நான் one ninetynine ன்னு நினைச்சுக்கிட்டு எங்கெங்கெல்லாமோ தேடினேன். ஆமாம், மேரியைப் பார்த்தீங்களாமே ?

**அருண்:** எந்த மேரியை ?

**லாரன்ஸ்:** அதான் சார் ! டீச்சர் மேரி ! அவ பெண்தான் மணமகள். பாவம் யாருமே இல்லாத அனாதை ! நீங்கதான்...

**அருண் :** நான்தான்.....?





குதுப்மினாரை ஒரு மலைக்குப் பக்கத்தில் வைத்தால் இப்படித்தான் இருக்கும். ஆனால் படத்தில் நீங்கள் காண்பது குதுப்மினார் அல்ல. நமது பாரதப் பிரதமர் அண்மையில் விஜயம் செய்த ஆப்கானிஸ்தானத்தில் 227 அடி உயரமுள்ள மினார் - இ - ஜாம் உள்ளது. இதன் அமைப்பு குதுப்மினாரைப் போலவே இருக்கிறது.

**லாரன்ஸ்:** *முன் நின்று கல்யாணத்தை நடத்தி வைக்கணும்.*

**அருண்:** *ஸாரி, இன்ஸ்பெக்டர். கல்யாணத்துக்கான செலவுகளை நான் ஏற்றுக்கிட்டேன். ஆனால் கல்யாணத்துக்கு நான் வருவது கஷ்டம். வியாபார விஷயமா வெளியூர் போயிடுவேன்.*

**லாரன்ஸ்** *(அவர் தோளில் கை வைத்து) : நான் விட்டாத்தானே நீங்க போக முடியும் ?*

**அருண் :** ம்....

**லாரன்ஸ்:** *நீங்க இருந்துதான் கல்யாணத்தை நடத்தணும். நீங்க இல்லேன்னு கல்யாணமே இல்லேன்னுதான் அர்த்தம் ! வரட்டுமா ! மிஸ்டர் அருண் ! இது போலீஸ்காரன் வீட்டுக் கல்யாணம். நீங்க தப்ப முடியாது !* **(சிரித்தபடி போகிறார்.)**

**அருண்** *(அவர் போனதும் கோபமாக, உரக்க): சிரிக்கிறியாடா லாரன்ஸ்! எதுக்காகச் சிரிக்கிறே?*

**(அடைக்கலம் பாதிரியை நினைவுகூர்ந்து அவருடைய சாய்வு நாற்காலி அருகே மண்டியிட்டுப் பேசுகிறார்.)**

**அருண்:** *ஃபாதர் ! வாணலி சூட்டைப் பொறுக்க முடியல்லேன்னு துள்ளினா நெருப்பிலே விழுந்துடுவேன் போலிருக்கே!* **I am between the frying pan and the fire, father!** *'டேய் ! முரட்டுப் பயலே, உலகத்தைப் புரிஞ்சுக்கடா! உன்னை நீ புரிஞ்சுக்குவே'ன்னு சொன்னீங்களே, ஃபாதர் !*

*உலகம் புரிஞ்சுடுச்சு ! கொஞ்சம் அதிகமாகவே புரிஞ்சுடுச்சு ! இனி மேல் நான் வெளி உலகத்திலே தைரியமா நடமாடவே முடியாதா ?*

*லாரன்ஸ் ! அவன் ஒரு கருநாகம் ! அடிபட்ட புலி ! அலையுறான், என்னைப் பிடிக்க ! இந்த ஊரை விட்டே நான் ஓடிட்டா ?...... ஓடி ஓடித்தான் ஓய்ந்து போயிட்டேனே, ஃபாதர் ! இதெல்லாம் நான் செய்த பாவத்தோட பலன். பாவத்தின் சம்பளம்;— மரணம்..... வரலியே ! எனக்கு மரணம் வரலியே !*

**(தமக்குத் தாமே குமுறி அழும் அருண் பிறகு உறுதியோடு பாதிரி கொடுத்த மெழுகுவர்த்தியினை ஏற்றிப் பிரார்த்தனை செய்கிறார்.)**

**அருண்:** *என் பேத்தி கல்யாணமாவது மகள் கல்யாணம் மாதிரி இல்லாமல் நல்லபடியாக நடக்கட்டும்.*

*டேய், லாரன்ஸ் ! நான் சாதாரண அந்தோணியில்லே. கோடீசுவரன் அருணந்தம். ரொம்ப வளர்ந்துட்டேன்! என்னை நீ ஒன்னும் செய்ய முடியாதுடா ! கல்யாணத்துக்கு நான் வரப் போறேன்! என்னை நீ பிடிக்கணும்னு நிரூபிக்கச் சாட்சி?... நல்லவேளை, ஃபாதர்! நீங்க உயிரோட இல்லே ! லாரன்ஸ் ! நான் அந்தக் கல்யாணத்துக்கு வரத்தான் போறேன்!.... நீ என்னை அசைக்க முடியாதுடா ! அசைக்க முடியாது! அசைக்கவே முடியாது !*

**(வெறி பிடித்ததுபோல் தம் மனக் குமுறலை வெளிப்படுத்தும் விதத்தில் உரக்கக் கத்துகிறார் அருண். பேத்தியின் திருமணம் அவருக்கு லாரன்ஸ் விரித்த சவாலை விளக்குகிறது.)**

**(தொடரும்)**

# கல்வித் துறை குளறுபடிகள்!!

"உங்கள் பெண்ணுக்குக் 'கார்டு' வந்திருக்கா?"

"இல்லே. உங்கள் பெண்ணுக்கு...?"

"ஊஹூம்... முந்நூற்றுச் சில்லறைதானே 'டோட்டல்'? 'கார்டு' எப்படி வரும்? நானூறுக்கு மேலே இருந்தாலே 'லாட்டரி' அடிக்க வேண்டியிருக்கே?" — அருகில் நிற்கும் பதினைந்து பதினாறு வயதுப் பெண்ணுக்குக் கண்கள் கலங்குகின்றன.

"கார்டு, மார்க்கு, அட்மிஷன் — இதெல்லாம் ஒண்ணுக்கு ஒண்ணு சம்பந்தமில்லாத விஷயம் சார்! இரண்டு நாளா திருவல்லிக்கேணியிலேயிருந்து ஒரு பெரியவர் இங்கே வந்து நாலரை மணி வரைக்கும் காத்திருந்துவிட்டு ஏமாற்றத்தோட திரும்பிப் போனார். பாவம்! அவர் பெண்ணுக்கு மார்க் 489ன்னு சொன்னார். 'கார்டு' வரவேயில்லையாம். இன்னிக்கு அந்தப் பெரியவரைக் காணோம். எங்கேயோ ஸ்கூல்லே ஆசிரியரா இருக்கிறதாச் சொன்னார்..."

"இன்னிக்கு ஸ்கூல் திறந்திருப்பா. இங்கே வந்து நின்னா, அவர் பிழைப்பு என்னவாகும்?"

அருகில் திடீரென்று ஒரு சலசலப்பு. ஒரு பெண் பிரின்ஸிபலின் அறையிலிருந்து சிரித்த முகத்துடன் வெளியே வருகிறாள்.

"என்னடி? கிடைச்சதா?" விசாரிப்பவர் பெண்ணின் தாயார்.

"கிடைச்சது. பணம் கட்டச் சொல்லிட்டாங்க" — இமயத்தின் உச்சியில் ஏறி நின்ற டென்ஸிங் அத்தருணத்தில் இதைவிட மகிழ்ச்சியை அடைந்திருப்பாரா என்பது சந்தேகம்!

"என்ன 'குரூப்' கொடுத்தாங்க?"

"ஸெகண்ட் குரூப்தான். நாசுரல் சயன்ஸ்."

எஸ். எஸ். எல். ஸி. புத்தகத்தைப் பிரித்து அதிலிருந்து ஒரு காகிதத்தை வெளியே எடுக்கிறாள் அந்தப் பெண்.

'கார்டு' வராதது குறித்துத் தொடக்கத்தில் உரையாடிக் கொண்டிருந்த இருவரும் எட்டிப் பார்க்கின்றனர். நானும் தலையை நீட்டுகிறேன். எஸ். எஸ். எல். ஸி. தேர்வு எண்கள் சிவப்பு எழுத்துக்களில் குறிக்கப்பட்டுள்ள பக்கம் அது.

தாயும் மகளும் பணம் கட்டும் 'கௌண்டர்' நோக்கிப் பீடுநடை போடுகின்றனர்.

"என்ன நியாயம், சார்? முந்நூற்றுப் பதினாறு மார்க்குக்கு செகண்ட் குரூப்பா?"



கோபுரச் சிகரத்தைக் கூட எட்டிப் பிடித்து விடலாம்; தலைகீழாக நின்றாலும் பள்ளியில் 'அட்மிஷன்' இல்லை!"

படிப்பதற்குத் தயார்! ஆனால் தரமான பள்ளிகள் எங்கே?





''மூந்நூற்றுப் பதினாறுதான். நானும் நல்லாப் பார்த்தேன். நானூற்று எண்பத் தொன்பது வாங்கின பொண்ணுக்குக் 'கார்டு' போகல்லே! மூந்நூற்றுப் பதினாறுக்கு 'நாகரல் ஸயன்ஸ்' குரூப் கிடைச்சிருக்கு!'' பொருமல் அவரது நாபியிலிருந்து வெளிப் படுகிறது.

''நாம பெருமூசகவிட்டு என்ன பண்ணறது? பெரிய இடத்துச் சிபாரிசா யிருக்கும்! சர்க் கார் கல்லூரியிலே 'தமிழ் தமிழ்'னு தமிழ் மீடியத்தைத் தலையிலே கட்டுறாங்க. அதுக் குப் பயந்து இது மாதிரி பிரைவேட் காலே ஜிலே ஜனங்க வந்து மோதறாங்க! இங்கே என்னடான்னா – திருப்பதி வெங்கடாசலபதி தரிசனம் கூட சுலபமாக் கிடைச்சுடும்போல இருக்கு; இந்தப் பிரின்ஸிபலைப் பார்க்க முடியல்லே! நானுந்தான் இரண்டு நாளா இந்த மரத்தடியிலே தவம் கிடக்கேன்!''

அருகில் நின்றிருந்த சிலர் நெருங்கி வந்து இந்த உரையாடலில் கலந்து கொள்ளு கின்றனர்.

''தமிழ் மீடியம் வேணும்னு யார் கேட் டாங்க? வேண்டாத ஒண்ணை ஏன் நம்ம தலையிலே கட்டறாங்க?''

''அதுதான் சார், ஜனநாயகம்!'' ஆத்திர மும் ஏமாற்றமும் கிண்டலுமாக வெளிப்படு கிறது.

''நாம் ஒதுக்கித் தள்ளற தமிழ் மீடி யத்தைப் பிடிவாதமாகப் புகுத்துறாங்களே— இவங்க வீட்டுப் பிள்ளைங்க தமிழ் மீடியமா படிக்கிறாங்க? எல்லாம் 'கான்வெண்ட்'தான். தமிழ் மீடியம் படிக்கிற எல்லாருக்கும் தமிழ் நாட்டிலே வேலை வாய்ப்பு செய்து தரவும் முடியாது; பம்பாய், கல்கத்தான்னு போய்த் தொலையலாம்னு – அங்கே தமிழ் மீடியத்தை எவன் சீண்டுவான்?''

''உத்தியோகம் இருக்கட்டும் சார்! பி. யு. ஸி. அட்மிஷன் விஷயத்திலேயே 'தமிழ்' மீடியம் இரண்டாம் பட்சமாய்த் தான் இருக்கு. தென்ஆர்க்காடு மாவட்டத் திலேயிருந்து ஒருத்தர் தம் மகளை அழைச் கண்டு வந்திருந்தார். பி. யு.ஸி.யிலே சேர்க்க. மார்க்கு எத்தனை தெரியுமோ? ஐந்நூறுக்கு மேலே! இதே சென்னை நகரத்திலே ஒரு தனியார் கல்லூரியிலே அந்தப் பெண்ணுக்கு இடமில்லேன்னு சொல்லிட்டாங்க!''

''ஐந்நூறுக்கு மேலே மார்க்கு இருந்துமா இடமில்லேன்னு சொன்னாங்க? ஒருவேளை சரியாய்ப் பார்த்திருக்க மாட்டாங்களோ, என்னவோ?''

''அதெல்லாம் இல்லே சார்! இங்கிலீஷ் மீடியம் எஸ். எஸ். எல். ஸி. படிச்சிருந்தா 350 மார்க் இருந்தாலும் போதும், இடம் கொடுத்திருப்போம். எத்தனை மார்க் இருந் தாலும் தமிழ் மீடியம் இங்கே வேண் டாம்னு சொல்லிட்டாங்களாம்!''

புகுமுக வகுப்பிலே சேருவதிலேதான் எவ் வளவு பிரச்னைகள், சங்கடங்கள்!

**கா**ட்சி மாறுகிறது. ஆனால் இது புகுமுக வகுப்பில் தேர்வு பெற்றவர்களின் பிரச்னை.

கல்லூரியின் தாழ்வாரத்தில் ஐந்நூறு பெண்கள் கும்பலாக அமர்ந்திருக்கின்றனர்.

''ஏன்டி, கேட்டியாடி ?''

''கேட்டேன். பிரின்ஸிபால் நிர்த்தாட் சண்யமா சொல்லிட்டாங்க. பி. ஏ.தான் கிடைக்குமாம். பி. எஸ்ஸி. கிடைக்காதாம்.''

''டி.பிளஸ் வாங்கியிருக்கியே ?''

'' 'திரீ டி' வாங்கினவங்களுக்குத்தான் பி. எஸ்ஸி. ஸீட் கிடைக்குமாம். அது சரி. உன் சேதி என்ன?''

''நான் காண்டக்ட் சர்டிபிகேட் கேட் டேன். டி. ஸி. (டிரான்ஸ்ஃபர் சர்டிபிகேட்) யையும் சேர்த்து வாங்கிண்டு போன்னு சொல்றாங்க.''

''ஏன் ?''

''மெடிகல் காலேஜுக்கு நான் அப்ளி கேஷன் போடப்போறேன்னு பிரின்ஸிபலுக்கு ஊகம்.''

''போட்டா என்னவாம் ?''

''நான் எங்கேயாவது டாக்டராயிட்டா?''

அந்தப் பெண் சிரிக்கிறாளா, அழுகிறாளா என்பது விளங்கவில்லை.

மருத்துவக் கல்லூரிக்குத் தேர்ந்தெடுக்கப் படுகிறவர்களின் பட்டியல் ஜூலை மாதம் 15ந் தேதிவாக்கில்தான் வெளியாகும். ஜூன் மாதத்திலேயே பி. ஏ., பி. எஸ்ஸி., பி. காம். பட்டப் படிப்புக்கு எல்லா 'ஸீட்' களும் நிரம்பிவிடும். மருத்துவக் கல்லூரிக்கு மனுப் போடுகிற மாணவர் பி. யு. ஸி. எந்தக் கல்லூரியில் படித்தாரோ அதன் தலைவரிடமிருந்து நன்னடத்தைக்குரிய அத் தாட்சி பெற்று அதன் நகலை மனுவோடு அனுப்ப வேண்டும். இந்த அத்தாட்சி வேண்டுமென்று மாணவர் தாம் பி. யு. ஸி. படித்த கல்லூரியில் கேட்டால், கல்லூரியை விட்டு வெளியேறுவதற்கான அத்தாட்சியை யும் பெற்றுக் கொள்ளும்படி வற்புறுத்து கிறார்கள் பல கல்லூரிகளில். இதில்தான் இருக்கிறது மாணவ மாணவியரின் சங்கடம்!

இந்த சர்டிபிகேட்டை வாங்கிக் கொண்டு விட்டால், மருத்துவக் கல்லூரி தேர்வில் வெற்றி பெறுவிட்டால் மாணவர் ஓர் ஆண்டிலே விணடிக்க வேண்டி யிருக்கிறது. ஜூலை 15ந் தேதிக்குப் பிறகு, பி.எஸ்ஸி., பி. ஏ. வகுப்புகளில் எந்தக் கல்லூரியில் இடம் கிடைக்கும்? இந்தச் சிக்கலிலிருந்து விடுபட வழி தெரியாமல் மாணவ, மாணவியர் பலர், உயர்ந்த தகுதி இருந்தும் மருத்துவக் கல்லூரிக்கு மனுப் போட முடியவில்லை.

மருத்துவக் கல்லூரிக்கு மனுச் செய்துள்ள மாணவர் ஒருவரின் அங்கலாய்ப்பைக் கேளுங்கள்: "மெடிகல் காலேஜுக்கு மனுப் போடுகிற போதே, அம்மை குத்திக் கொண்டு அதற்கான சர்டிபிகேட்டையும் மனுவோடு சேர்த்து அனுப்பவேண்டியிருக்கிறது. அம்மை குத்திக் கொண்ட நாலாவது நாள் சிலருக்கு ஜுரம் வந்துவிடுகிறது. இரண்டு நாள் படுத்த படுக்கையாகக் கிடக்க நேரிடுகிறது. உடம்பு பழைய நிலைக்கு வருவதற்குள் 'இன்டர்வியூ'வுக்கு வரச் சொல்லி விட்டால் என்ன செய்கிறது? கல்லூரியில் இடம் கொடுத்த பிறகு, அம்மை குத்திக் கொள்ளச் சொன்னால் போதாதா ? இந்த விதியை மாற்றி அமைத்தால் குடிமுழுகிப் போய் விடுமா ?"

ஓர் உயர்நிலைப்பள்ளிக்குள் நுழைவோம் : எதிரில் ஒரு சிறுவனுடன் வந்து கொண்டிருக்கும் நடுத்தர வயது மனிதர் மணிபர்ஸைத் திறந்து உள்ளே ஏதாவது மிச்சம் மீதி இருக்கிறதா என்று பார்க்கிறார்!

"பெயர்தான் அரசினர் உயர்நிலைப் பள்ளி. ஆனால்...."

"ஆனால், என்ன? சம்பளம்கூட வாங்குவதில்லையே, இப்போது ? இலவசக் கல்வி தானே ?"

"சம்பளம்னு என்னவோ வசூலிக்கிறதில்லே. இதோ, இவன் என் பையன். ஒன்பதாவது வகுப்பில் சேர்த்திருக்கிறேன். இந்த ரசீதைப் பாருங்கள் !" — மணிபர்ஸைத் திறந்து ரசீதை எடுத்துக் காட்டுகிறார்.

என் கண்களையே நம்ப முடியவில்லை. ரசீதில் 'நன்கொடை' ரூ. 15 என்று குறிப்பிட்டுள்ளதைக் கண்டு வியக்கிறேன்.

என் திகைப்பைப் பார்த்து விட்டு அவர் கேட்கிறார்: "இப்போதாவது நம்ப முடிகிறதா? மாம்பலத்திலே படிச்சுண்டு இருந்தான். மீனம்பாக்கத்திலே வீடு கட்டியிருக்கேன், புதிசா. அங்கேயிருந்து டி. ஸி. வாங்கிண்டு வந்து இங்கே சேர்த்தேன். அரசினர் பள்ளிதான். சம்பளம் இல்லே. ஆனால், நன்கொடை பதினைஞ்சு ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கு !"

நகராண்மைக் கழகப் பெண்கள் உயர் நிலைப் பள்ளி ஒன்றில் ஆறும் படிவத்தில் சேருவதற்குப் பல சிறுமிகள் பெற்றோர்களுடன் வந்திருக்கின்றனர். 'டெஸ்ட்' முடிந்து, தேர்வு பெற்ற சிறுமிகளின் விண்ணப்பத்தைப் பூர்த்தி செய்கிறார்கள். 'பெற்றோர் அல்லது பாதுகாவலரின் கையொப்பம்' என்று இறுதியில் அச்சடித்துள்ளது. ஒரு







1. மேற்கு ஜெர்மனியில் ரயில்வே இலாகா, பிரயாணம் செய்யும் குழந்தைகள் படிக்கப் புத்தகங்களை வழங்குகிறது!

2. மேற்கு பெர்லின் நகரில் தொடக்கப் பள்ளிகளில் 4, 5, 6 ஆகிய வகுப்புகளின் மாணவ மாணவிகள் சமையல் கலையில் பயிற்சி பெறுகிறார்கள் !

3. மேனாட்டுப் பள்ளியில் ஒரு வகுப்பு.

சிறுமியின் தாயார் அதனை ஆசிரியையிடம் காட்டி, ''இங்கே நான் கையெழுத்துப் போடலாமா?'' என்று கேட்கிறார்.

''தகப்பனார் இருக்கிறார் அல்லவா?''

''இருக்கிறார். ஆனால், அவருக்கு வெளியூரில் உத்தியோகம்.....''

''தகப்பனார்தான் கையெழுத்துப் போட வேண்டும்!'' — ஆசிரியையின் கண்டிப்பான பதில்.

''சரி, வா! போஸ்டாபீசுக்குப் போய் அப்பாவை உடனே வரச் சொல்லித் தந்தி அடிக்கலாம்!'' என்று மகளை அழைத்துக் கொண்டு தபால் ஆபீசுக்கு விரைகிறார், அந்தப் பெண்மணி. பாவம்! சிறுமியின் தகப்பனார் சென்னைக்கு வந்து திரும்பிச் செல்வதென்றால் எவ்வளவு செலவாகுமோ?

'ஆண்களோடு பெண்களும் சரி நிகர் சமானம்' என்று பாரதி முழங்கியதெல்லாம் தமிழ் சினிமாக்களில் காதலனும் காதலியும் 'டூயட்' பாடிக் கொண்டு ஓடிப் பிடித்து விளையாடுவதற்கு மட்டுந்தானா? ஒரு சிறுமியை வளர்ப்பதில் தந்தைக்கு உரிய அளவு தாய்க்குப் பொறுப்பு கிடையாதா? பள்ளியில் சேர்க்கும் விண்ணப்பத் தாளில் சிறுமியின் தாயார் கையெழுத்துப் போட்டால் என்ன குறைந்து போய்விடும்?

சாதி, மதம் பற்றிய தகவல்களைத் தெரிவிக்கும்படி மதச் சார்பற்ற நாட்டிலே ஏன் கோருகிறார்கள்? புள்ளி விவரத்துக்காக மட்டும் என்று கண் துடைப்பானேன்?

தன் குழந்தையை 'கான்வென்ட்' பள்ளியில் சேர்த்துப் படிக்க வைக்க வேண்டும் என்று எந்தப் பெற்றோருக்குத்தான் ஆசையிராது? ஆனால், 'கான்வென்ட்' பள்ளிகளில் மாதம் பத்து அல்லது பதினைந்து ரூபாய் சம்பளம் வசூலிக்கிறார்கள். சில பள்ளிகளில் மூன்று மாதச் சம்பளத்தையும், 'ஸ்பெஷல் ஃபீஸ்', விளையாட்டுக்களுக்கு, மருத்துவப் பரிசோதனை என்று ஒட்டு மொத்தமாக ஒரே சமயத்தில் — குழந்தையைப் பள்ளியில் சேர்க்கும் போதே ரூ. 75 முதல் ரூ. 120 வரை செலுத்தும்படி இருக்கிறது. நடுத்தரக் குடும்பத்தினரின் சக்திக்கு அப்பாற்பட்டது இது. மாநகராட்சித் துவக்கப் பள்ளிகளில் கல்வித் தரம் அவ்வளவாகத் திருப்தி அளிக்காததால் அங்கு தங்கள் குழந்தைகளைச் சேர்க்கவும் விருப்பமில்லை. நடுத்தரமாகத் தங்கள் சக்திக்கு ஏற்ப மாதம் ரூ. 5 அல்லது 6 ரூபாய் சம்பளம் வாங்கும் பள்ளிகளில் குழந்தைகளைச் சேர்க்க விழைகின்றனர் பெற்றோர்.

பெற்றோர்களின் இந்த ஆவலைப் புரிந்து கொண்ட பலர் நர்ஸரி, கிண்டர் கார்ட்டன் என்று பெயர் சூட்டிச் சென்னையில் தெருவுக்குத் தெரு பள்ளிக்கூடங்கள் ஆரம்பித்து விடுகிறார்கள். எஸ். எஸ். எல். ஸி. அல்லது பி. யு. ஸி. படித்த குடும்பப் பெண்கள் ஓய்வு நேரத்தைப் பயன்படுத்திக் கொள்ளவும், குடும்ப வருவாயைப் பெருக்கிக் கொள்ளவும் வேண்டி 'நர்ஸரி'ப் பள்ளிகள் ஆரம்பித்து விடுகின்றனர். இந்தப் பள்ளிகளுக்கு அரசினர் அங்கீகாரம், பாடதிட்ட விதிகள் ஏதுமில்லை. தங்கள் பள்ளியின் கல்வித் தரம் மிகவும் உயர்ந்தது என்று பறைசாற்றுவது போல, உயர்நிலைப் பள்ளிகளில் ஏழாவது வகுப்புக்கு என்ன ஆங்கிலப் பாட புத்தகம் வைத்திருக்கிறார்களோ, அதையே ஐந்தாவது வகுப்புக்கு வைத்து விடுகிறார்கள்! புத்தகத்தில் எந்த அளவு சொல்லிக் கொடுக்கிறார்கள், எந்த அளவுக்குக் குழந்தைகள் புரிந்து கொள்ளுகின்றனர் என்பது வேறு விஷயம்! ஏனென்றால், பெருவாரியான 'நர்ஸரி'களில் பயிற்சி பெற்ற ஆசிரியைகள் குறைவு, அநேகமாக இல்லை என்றே கூறலாம்!

படிப்பு ஒருபுறமிருக்க, இது போன்ற பல நர்ஸரிகளில் போதிய வசதிகள் உள்ளனவா என்றால் அதுவுமில்லை! கீற்றுக் கொட்டகைகளின் கீழ் நடைபெறும் 'நர்ஸரி'கள் பல. மழை பலமாகப் பெய்தால் ஒழுகும். காற்று கடுமையாக வீசினால், குழந்தையைப் பள்ளிக்கு அனுப்பிய பெற்றோர்கள் வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டு இருக்க வேண்டும். எங்கே கொட்டகை விழுந்து விடுமோ என்ற பயம்!

'கான்வென்ட்' பள்ளிகளைவிடச் சம்பளம் சிறிது குறைவாக இருக்கிறதே என்று இது போன்ற 'கிண்டர் கார்ட்டன்', 'நர்ஸரி'களில் குழந்தைகளைச் சேர்க்கும் பெற்றோர்கள் அடுத்த சில தினங்களிலேயே கையைப் பிசைந்து கொண்டு நிற்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. மூன்றாம் வகுப்புச் சிறார்க்கு முப்பது ரூபாய் கொடுத்துப் புத்தகங்களும் நோட் புத்தகங்களும் பள்ளியிலேயே வாங்கியாக வேண்டும். நான்காம் வகுப்புக்கு 40 ரூபாய். மலிவாக அல்லது சிறுகச் சிறுகப் பணம் கொடுத்து வெளியே கடைகளில் வாங்கிக் கொள்ளலாம் என்றால், அதற்கு இடம் கொடுப்பதில்லை 'நர்ஸரி' நிர்வாகிகள். அவர்களுக்குக் கிடைக்கும் கமிஷன் தொகையை இழக்க நேரிடுமே! இது தவிர, அவ்வப்போது பெற்றோர் தினம், உற்றோர் தினம், உறவினர் தினம், விளையாட்டுப் போட்டி தினம் என்று பல்வேறு 'தினம்'கள்! இதற்கெனப் பிள்ளைகளிடம் தலா ரூ. 1 அல்லது 2 வசூலிக்கிறார்கள்.

இவை தவிர, பள்ளியின் கட்டட நிதிக்கென ஒவ்வொரு குழந்தையிடமும் ஐந்து ரூபாய் முதல் பத்து ரூபாய் வசூலித்து விடுகிறார்கள். நேரிடையாகக் கேட்காமல் 'உதவி' நாடகங்கள் நடத்தி டிக்கெட் விற்பனை செய்வது ஒரு வகை. சில பள்ளிகளில் ஒவ்வொரு குழந்தையிடமும் பத்துப் பன்னிரண்டு டிக்கெட்டுகளைக் கொடுத்து விற்கச் சொல்வதுண்டு. டிக்கெட்டுக்களை எடுத்துக் கொண்டு யாசகத்துக்கு அலைவது போல் குழந்தைகள் தெருத் தெருவாக அலையும் காட்சி கண்ணராவியாக இருக்கும். இந்தத் தொல்லை வேண்டாமென்று எல்லா டிக்கெட்டுகளுக்கும் உரிய பணத்தை 'அழுது' விட்டு, டிக்கெட்டுக்களை நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் வழங்கிவிடுகின்றனர் வசதியுள்ள சிலர்.

''பெருந்தொகை மூலதனமாகப் போட்டு ஒரு தொழில் ஆரம்பிப்பதைவிட ஒரு 'நர்ஸரி'ப் பள்ளி ஆரம்பிப்பது லாபகரமாக இருக்கும் போலிருக்கிறதே!'' என்கிறார் ஓர் அநுபவசாலி.

—'பாணன்'

# தண்ணீர் கஷ்டமும் தடுப்பு ஊசியும்



[சென்னை நகரில் குடிதண்ணீருக்குக் கடுமையான பஞ்சம் ஏற்பட்டுள்ளதால் வருகிற வாரங்களில் காலரா நோய் பெருமளவில் பரவக்கூடும் என மாநகராட்சி அதிகாரிகள் எச்சரித்துள்ளனர். காலரா எவ்வாறு பரவுகிறது, இந்நோயின் அறிகுறிகள், தடுப்பு முறைகள், சிகிச்சை இவை குறித்து டாக்டர் என். சிவசுப்பிரமணியன், டாக்டர் (ஸ்ரீமதி) சசிகலா சிவசுப்பிரமணியம் இருவரையும் பேட்டி கண்டு அறிந்த தகவல்களை அளிக்கிறது, இக்கட்டுரை. - ஆசிரியர்]

**காலரா எவ்வாறு மக்களிடையே பரவுகிறது?**

அசுத்தநீர், அழுகிய பழங்கள், இந் நோய் கண்டவர்களிடம் நெருங்கிப் பழகுதல் — இப்படிப் பல்வேறு காரணங்கள்.

**இந்நோயின் அறிகுறிகள் என்ன?**

காலராவை வாந்தி, பேதி எனக் குறிப்பிடுகிறோமல்லவா? அதன் பெயருக்கிணங்க, நோய் கண்டவரிடம் வாந்தி, பேதி இரண்டும் தோன்றும். அரிசி களைந்து கொட்டும் நீர் (கழுநீர்) போன்று திரவமாகவே பேதியாகும். இந்த ஒரு நோய்க்கு மட்டுந்தான் இவ்விதம் பேதியாகும். அடிக்கடி பேதியாகும். உடலெல்லாம் வியர்த்துக் கொட்டுவதுண்டு. கண்கள் குழி விழும். உடல் முழுதும் சில்லிட்டுப் போகும். நாடித் துடிப்பு வேகமாக இருக்கும். முக்கியமாக, கால்களில் வலி ஏற்படும்— உடலில் உள்ள உப்பு, நீர் இவை இரண்டும் வெளியேறி விடுவதால், தசைகள் இழுத்துப் பிடித்துக் கொள்ளும். நரம்புகளில் இறுக்கம் ஏற்படுவதால் வலி தோன்றும். சிறுநீர்ப் போக்கு நின்றுவிடும்.

**இவையனைத்தும் தீவிரமடைந்து நோயாளியின் உயிருக்கு ஆபத்து விளைவிக்க எவ்வளவு நேரம்பிடிக்கும்?**

பன்னிரண்டு மணி நேரத்தில் நிலைமை தீவிரமடைந்து விடும். உடனடியாகச் சிகிச்சை தொடங்கினால் உயிருக்கு ஆபத்தில்லாமல் காப்பாற்றிவிட முடியும். முன் காலத்தில் காலரா என்றால் மக்கள் பயந்து நடுங்கினர். அதற்குச் சிகிச்சையே இல்லை; காலரா வந்தால் மரணந்தான் முடிவு என்று எண்ணினர். இன்று அப்படி இல்லை. தற்கால நவீன சிகிச்சை முறைப்படி நோயாளியைக் காப்பாற்றி விட இயலும்.

**நோயின் அறிகுறிகள் தோன்றியவுடனே நோயாளியை டாக்டரிடம் அழைத்துச் செல்ல வேண்டும்; அப்படித்தானே?**

தனிப்பட்ட மருத்துவர்களிடம் சென்றால்கூட, அவர்கள் உடனே தொற்றுநோய் ஆஸ்பத்திரிக்கு விவரம் தெரிவித்து விடுவார்கள். அது மருத்துவர்களின் கடமை. பொது மருத்துவ மனைகளில் காலரா நோயாளிகளைச் சேர்த்துக் கொள்வதில்லை. உடனடியாகத் தொற்றுநோய் ஆசுபத்திரிக்குத் தகவல் கொடுத்தால் அவர்களே நோயாளியை வீடு தேடி வந்து அழைத்துப்போய், தக்க சிகிச்சை செய்து காப்பாற்றுவார்.

**என்ன சிகிச்சை செய்வார்கள் டாக்டர்?**

உடலிலுள்ள உப்புச் சத்து, நீர் இரண்டும் இந்நோய் காரணமாக வெளியேறி விடுவதால் உடலில் உப்பு நீர் செலுத்துவார்கள். தென்புக்காக குளுகோஸ் செலுத்துவார்கள். விட்டமின் சத்துக்களும் ஊசி மூலம் செலுத்தப்படும். நோய்க் கிருமிகளை அழிக்க க்ளோரோஸ்ட்ரெப், அல்லது சல்ஃபானமைட் மருந்துகள் கொடுப்பார்கள். உடலின் உஷ்ணம் குறையாமலிருக்க வேண்டியது அவசியம்.

**ஒரு குடும்பத்தில் யாருக்காவது இந்நோய் கண்டால் அக்குடும்பத்தினரும் அக்கம் பக்கத்தில் உள்ளோரும் அனுஷ்டிக்க வேண்டிய விதிகள் என்ன?**

வருமுன் காத்தலே சிறந்த வழி. அனைவரும் தடுப்பு ஊசி போட்டுக் கொள்ள வேண்டும். ஊசி போட்டதன் காரணமாகக் காய்ச்சல் வராது. இஷ்டப்படி நடமாட முடியும். எனவே ஊசி போட்டுக்கொள்ள மக்கள் பயப்பட வேண்டியதில்லை. நோய்கண்டவர் அணிந்த உடைகளைக் கொதிக்கும் நீரில் கழுவ வேண்டும். டெட்டால் போன்ற கிருமிநாசினிகளையும் தாராளமாக உபயோகிக்க வேண்டும். குடிநீரை 100 டிகிரிக்குக் கொதிக்க வைத்தால் காலராக் கிருமிகள் இறந்துவிடும். இவை மிக நுண்ணிய கிருமிகள் ஆதலால், நீரை வடிகட்டுவதால் இவற்றை அப்புறப்படுத்திவிட முடியாது என்பதை மக்கள் உணர வேண்டும். தொற்று நோய் ஆசுபத்திரிக்கு நோயாளியை எடுத்துச் செல்லும் வரையில் அவரை மற்றவர்களிடமிருந்து பிரித்துத் தனியாகப் படுக்க வைத்தல் அவசியம். காலரா பரவலாக உள்ள காலத்தில் பழங்கள், காய்கறிகள் வாங்கும் போது எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஈ மொய்த்த பண்டங்களைச் சிறுவர்கள் புசிக்கலாகாது. பேட்டி: ரா. ப.

# தீராத விளையாட்டு





கு. அழகிரிசாமி

ரங்கராஜனுக்கு எந்த ஊர், என்ன தொழில், உடன் பிறந்த சகோதரிகள் எத்தனை என்பன போன்ற கேள்விகளைக் கேட்டு அந்த அம்மாள் விசாரித்தாள். அவனும் தன் குடும்ப வரலாற்றைச் சுருக்கமாகச் சொன்னான். மதுரையிலேயே தங்கி விடவும், வக்கீல் தொழில் பார்க்கவும் தீர்மானித்திருப்பதை அவன் தெரிவித்தான்.

அந்த அம்மாள் விசாரித்தது போல் விஜயாவின் குடும்ப வரலாற்றைப் பற்றி விசாரிக்க வேண்டும் என்று அவனுக்கு ஆவல் துடித்தது. ஆனால் வயதில் மூத்தவர்களைப் பார்த்து அப்படி விசாரிப்பது மரியாதைக் குறைவான காரியம் என்று நினைத்தான். அத்துடன் அவளுடைய தந்தை அந்த ஊரில் பிரபலமான ஒரு மூக்கியஸ்தர் என்று அவனுக்குத் தோன்றியதால், அவரை யார், எவர் என்று விசாரிப்பது தன்னுடைய அறியாமையைத்தான் புலப்படுத்தும் என்று கருதிப் பேசாமல் இருந்து விட்டான்.

அப்புறம் அவன் அதிக நேரம் அங்கு இருக்கவில்லை.

''நேரமாகிறது. இன்னொரு நாள் வர்றேன். இவங்க அப்பாவையும் பார்க்கிறேன்'' என்று சொல்லிக் கொண்டு புறப்பட்டு விட்டான்.

அப்பொழுது விஜயா, ''உங்க வீட்டை எனக்குக் காட்டினீங்க. எங்க வீட்டை உங்களுக்குக் காட்ட வேண்





**ஜலதோஷமும் ஃப்ளுவும் எனக்கு வந்தால் கட்டாது**

என்கிறார் திருமதி ஆன்ஜெலா ஃபர்னாண்டஸ், பிரைவேட் நர்ஸ்

# அனஸின் எனக்கு விரைவிலே நிவாரண மளிக்கப் போதுமான சக்தி வாய்ந்தது.



# அனஸின் குழந்தைகளுக்குக் கூட நம்பகமானது.

அனஸின் சக்தி மிக்கது. ஏனெனில் உலகெங்கும் டாக்டர்கள் அதிகமாகச் சிபாரிசு செய்யும் வலி நிவாரணி அதில் அதிகமாக அடங்கியுள்ளது. அது நம்பத்-மானது. ஏனெனில், ஒரு டாக்டரின் மருந்துக் குறிப்பைப் போலவே மருத்துவ முறையில் அது சரிவிகிதம் செய்யப்பட்டது. எனவே இந்தியா விலேயே உச்ச விற்பனையுள்ள வலி நிவாரணியாக விளங்குகிறது அனஸின். தலைவலி, ஜலதோஷம், ஃப்ளு, உடல் வலி, பல்வலி மற்றும் தசை வலிகளுக்குச் சாப்பிடுங்கள் அனஸினை.

# அனஸின்

சக்தி வாய்ந்த
நம்பகமான
வலிநிவாரணி



Regd. User: Geoffrey Manners & Co. Ltd.

டாமோ? உள்ளே வாருங்கள்'' என்று அழைத்தாள்.

அவனை அழைத்துக் கொண்டு போய் வீட்டின் மூலை முடுக்குகளையெல்லாம் காட்டுவது தன்னுடைய இருதயத்தின் ஒவ்வொரு பகுதியையும், ஒவ்வொரு அந்தரங்கமான பகுதியையும் அவனுக்குத் திறந்து காட்டும் ஒரு காரியம் போல் அப்பொழுது அவளுக்குத் தோன்றியது. தனது மன வெளியில் அவன் காலூன்றி நடமாடுவதை மெய் புளகிக்க அனுபவிப்பதற்குத் துடிக்கிற தன் சொல்லொணுத ஆசையை அவள் இந்த விதமாக வெளியிட்டு நிறைவேற்றிக் கொள்ள முனைந்தாள்.

அவளைப் பின்தொடர்ந்து ரங்கராஜன் உள்ளே சென்றுன். அந்த வீட்டின் வெளித் தோற்றத்துக்கும் உள் அமைப்புக்கும் சம்பந்தமில்லாமல் இருந்தது. உள்ளே எத்தனையோ அறைகள். ஒவ்வொரு படுக்கை அறையும் விசாலமாக, ஒரு நவநாகரிக ஹோட்டலில் காணும் அத்தனை சொகுசும், வசதிகளும் நிறைந்ததாக இருந்தது. தெருக் கோடியில் இருக்கும் மற்ருெரு வீட்டின் பின் பகுதி சிறிது தூரத்திலேயே முடிவடைந்து விட்டது. அதற்குப் பின்புறத்தில் விஜயாவின் வீடே வியாபித்திருந்தது. அங்கே மிகவும் விசாலமான ஒரு ஹால். சாப்பிடும் இடம் அதுதான். நீண்ட மேஜையைச் சுற்றித் தேவைக்குமேல் நாற்காலிகள் கிடந்தன. அதற்குப் பின்னுல் சமையற்கட்டு. அதையும் தாண்டி மற்ருெரு பெரிய ஹால். மூலைக்கு மூலை குளியல் அறைகள். பின் கடைசியில் காரேஜ் இருந்தது. அப்புறம் ஒரு தெரு. ஒரு தெருவிலிருந்து மறு தெரு வரைக்கும் நீண்டு பரந்திருந்த அந்த வீட்டில் எந்த இடமும் ஒதுக்குப்புறமாகவோ இருண்ட மூலையாகவோ இல்லாமல், பிரகாசமாக, கண்ணுடி போல் தரையும் சுவர்களும் பளபளத்துக் கொண்டிருந்தன. பெரிய பெரிய திரைகளும், கண்ணுடிப் பெட்டிகளுக்குள் வெளிநாட்டுப் பொம்மைகளும், கலைப் பொருட்களும் பெரிய பெரிய ஓவியங்களும் கண்களைக் கொள்ளை கொண்டன. ரங்கராஜனுக்குப் பிரமிப்பே உண்டாகிவிட்டது.

விஜயாவுடன் திரும்பவும் அவன் வெளியே வந்தான். இத்தனை வசதிகளும், அழகுகளும், அலங்காரங்களும் ஓர் அழகான பங்களாவில் இருந்தால் பொருத்தமாக இருக்கும் என்றும், இந்த வீடு எவ்வளவு விசாலமாக இருந்தாலும், மாடியோ, சுற்றுச் சுவரோ பூந்தோட்டமோ இல்லாமல் சந்து போன்ற ஒரு சிறிய தெருவில் இருக்கும் பழைய காலத்து வீடுதானே என்றும் நினைத்தான். விஜயாவின் வீட்டார் இதற்கு முன் சொந்தப் பங்களாவில் இருந்ததும், இப்போதுதான் இந்த வீட்டுக்கு வந்திருக்கிருர்கள் என்பதும் அவனுக்கு ஞாபகத்துக்கு வந்தது. அந்த விஷயத்தைப் பற்றி அவளிடம் கேட்கவும் செய்தான்.

''சொக்கிகுளத்தில் உங்களுக்கு ஒரு பெரிய பங்களா இருக்கிறதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன்'' என்று ரங்கராஜன் ஆரம்பித்தான்.

''இருக்கே'' என்றுள் விஜயா.

''இந்த அழகான சாமான்களும், அலங்காரங்களும் அந்த மாதிரி பங்களாவில் இருந்தால் இன்னும் பொருத்தமாக இருக்கும் இல்லையா?''

அவளோ அவள் தாயாரோ இதற்கு ஓர் எதிரொலியும் செய்யாமல் மௌனமாக இருந்தார்கள்.

இருவருடைய முகங்களையும் ஒரு முறை அவன் ஏறிட்டுப் பார்த்தான்.

பங்களாவை விட்டு வந்ததில் மறைக்க வேண்டிய மர்மம் எதுவும் இல்லை என்றுலும், அவ்வளவு தூரத்துக்குத் தன் குடும்பத்தைப் பற்றிச் செய்திகளை முதன் முதலில் அறிமுகமான ஒருவரிடம் சொல்ல வேண்டுமா என்றுதான் அந்த அம்மாள் யோசித்தாள். விஜயாவுக்கோ தாயாரை முந்திக் கொண்டு அந்த விஷயத்தைப் பற்றிப் பேசினுல் அவளுக்குப் பிடிக்குமோ பிடிக்காதோ என்ற சந்தேகம்.

ரங்கராஜனின் கேள்வியை மறக்கடிக்க அந்த அம்மாள் வேறொரு செய்தியை எடுத்துச் சொன்னுள்:

''இங்கே இருக்கிற சாமான்கள் கொஞ்சம். இங்கே இடமில்லேன்னு மணல் வீடு ரோட்டிலே மாடி பூராவும் போட்டு வச்சிருக்கிறுர். யானைத் தந்தம், நிஜப் புலி மாதிரி நிற்கிற ரெண்டு பெரிய பொம்மை, காஷ்மீர் கம்பளம், இப்படி எத்தனையோ அங்கே கிடக்கு. உயிருக்குயிரா வச்சிருந்த ரெண்டு நாய்களைக் கூட ஒரு சிநேகிதருக்குக் குடுத்திட்டார்...''

அந்த அம்மாள் இவ்வாறு சொன்ன பிறகு, ''எதுக்காக இப்படி?'' என்று ரங்கராஜன் சிரமமில்லாமல் கேட்க முடிந்தது.

''இது ஒரு காலம். யாரும் போகச் சொல்லலே. நாங்களாத்தான் வந்தோம். சொல்லப் போனு நான்தான் காரணம். ஒரு ஜோஸ்யர் பேச்சைக் கேட்டு நான்தான் அந்தப் பங்களாவை விட்டுக் கொஞ்ச காலம் வெளியே

போய் இருக்கலாம்னு பிடிவாதமாச் சொன்னேன். அவர் கேட்கவே இல்லே. கடைசியில் 'அம்மா சொல்றப் படிலே செய்யலாமே. போவோம்'னு விஜயா சொன்னப்புறம்தான் அவர் சம்மதிச்சார். இந்த வீட்டுக்கு வந்து சேர்ந்தோம். நாங்க வாடகை வீட்டிலே குடியிருக்கிறதாச் சொன்னு யாரும் நம்பத்தான் மாட்டாங்க!''

''ஓ!'' என்று மட்டும் ரங்கராஜன் சொல்லி, அப்புறம் எதையும் விசாரிக்காமல் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டான்.

வீடு மாற்றியதின் முழுப் பின்னணியும் அவனுக்குத் தெரியவில்லை. ஜோஸ்யன் பேச்சைக் கேட்டு இப்படி யாரும் குடி கிளம்பி வரமாட்டார்கள் என்றே அவனுக்குத் தோன்றியது. ஜோஸ்யன் சொந்த வீட்டை விட்டு ஓடும்படி எதற்காகச் சொல்றுன்? முதலில் ஜோஸ்யனை அழைத்துக் கேட்க வேண்டிய அவசியம்தான் ஏன் ஏற்பட்டது? இப்படி அவனுக்குப் பல சந்தேகங்கள் முளைக்கவே, ஏதோ ஒரு மர்மம் இருக்கிறது என்று தோன்றியது. என்றாவது ஒரு நாள் விஜயாவையே கேட்கலாம் என்று நினைத்துக் கொண்டு தன் வீட்டுக்கு வந்து சேர்ந்தான்.

அதற்கு ஒரு வாரம் கழித்துத்தான் அருணாசல முதலியார் ரங்கராஜனைச் சென்னைக்குப் போகும்படி தூண்டியும், இனிமேல் தொழில் நடத்திச் சம்பாதிப்பதில் ஈடுபட வேண்டியதை வற்புறுத்தியும் எழுதிய கடிதம் வந்து சேர்ந்தது. அதைப் பார்த்து, எதற்காக வாழ்க்கையை வேண்டுமென்றே ஒரு சுமையாக மாற்றி அதைச் சுமப்பதிலேயே வாழ்க்கையைத் தொலைக்க வேண்டும் என்றும் அவன் கருதலானுன்.

## அத்தியாயம் 17

முன்னோர்கள் தேடி வைத்த சொத்திலிருந்து எடுத்துச் சாப்பிட்டுக் கொண்டு, ஒரு வேலையும் செய்யாமல் சோம்பேறியாகவே வாழ வேண்டும் என்பது ரங்கராஜனின் நோக்கமில்லை. ஆனால் அவனுக விரும்பி, மனம் தோய்ந்து ஈடுபடத் தக்க தொழில் எதுவும் அவனுக்குத் தென்படவில்லை. இதுதான் அவனுடைய பிரச்னையாக இருந்தது. வக்கீல் தொழிலுக்கென்றே அவன் படித்துப் பட்டம் பெற்றது உண்மைதான். படிக்கும் போது, படிப்புக்காகவே படிக்கிறோம் என்ற உணர்ச்சிதான் அவனுக்கு இருந்தது. எதிர்காலத்துக்குத் தன்னைத் தயார்ப் படுத்திக் கொள்வதாக அவனுக்கு அப்போது தோன்றவே இல்லை. அப்பாவின் விருப்பத்தை நிறைவேற்றுகிறோம் என்ற எண்ணத்தில், உற்சாகமாகவே படித்தான். படித்துத் தேறிப் பட்டமும் பெற்ருன். அதோடு தன் வாழ்க்கைக் கடமையே தீர்ந்துவிட்டது போல் நினைத்து விட்டான். ஆனால் கடமை இனிமேல்தான் இருக்கிறது என்பதை அறிவுறுத்திக் கொண்டு சித்தப்பாவிடமிருந்து கடிதம் வந்து சேர்ந்தது.

வக்கீல் தொழில் அவன் மனத்தைக் கொஞ்சம்கூடக் கவரவில்லை. அதோடு முத்துக் குமார் அதைப் பற்றி அனுபவ பூர்வமாகச் செய்த விமரிசனம், அவனுடைய பிடிப்பின்மையை வளர்த்து விட்டது. ரங்கராஜனின் மனம் மிகவும் ஊசலாடியது.

அவனுடைய தந்தை தாம் ஒரு வக்கீல் ஆகிவிட வேண்டும் என்று ஆசைப்பட்டார். சந்தர்ப்பவசத்தால் அந்த ஆசை நிறைவேறுமல் போய் விட்டது. அது அவருக்கு ஒரு மனக் குறையாகவே இருந்து வந்தது. தம் வாழ்க்கையில் நிறைவேருத லட்சியத்தைத் தம்முடைய செல்வப் புதல்வனின் வாழ்க்கையிலாவது நிறைவேறும்படி செய்து ஆத்ம திருப்தி அடைய நினைத்தார். அதற்காகவே அவனைப் படிக்க வைத்தார். இது ரங்கராஜனுக்குத் தெரியும். வக்கீல் தொழில் செய்ய மறுத்தால், அருமைத் தந்தையை நிராசையுறச் செய்து வாழ்நாளெல்லாம் மன வேதனைக்கு உள்ளாக்க நேரும். சித்தப்பாவும் தன்னை வெறுக்கத் தொடங்கி விடுவார். இந்தப் பயங்கரங்கள் ஒருபுறமிருக்க, மாற்றுத் தொழிலாக ஒன்றைக் கைக் கொள்வதற்கும் தனக்குத் தெரியாது. என்ன தொழில் தெரியும்? பதினறு ஆண்டுகள் கல்விப் பயிற்சி பெற்று, கடைசியில் டிகிரியும் வாங்கிக் கொண்ட பிறகு தனக்கு ஒரு தொழிலும் தெரியாது, மனப்பூர்வமாக ஈடுபடுவதற்கான எந்தத் தொழிலுக்கும் தான் பெற்ற கல்வி தன்னைத் தயார்ப்படுத்தவில்லை என்ற உண்மையைத்தான் உணர்ந்தான். அவனுக்குத் திக்குத் திசையே தெரியவில்லை.

எவ்வளவோ யோசித்தான். பெரியவர்களின் திருப்திக்காகக் கசப்பு மருந்தைச் சாப்பிடுவோம், பின்பு தெய்வம்



சகோதரிகள்: வி. சுகன்யா, வி. ஹேமாவதியின் பரதநாட்டிய அரங்கேற்றம் சமீபத்தில் சென்னை தியாகராயநகர் வாணி மஹாலில் வெகு விமரிசையாக நடைபெற்றது. சகோதரிகள் இருவரும் பதினொரு நடன நிகழ்ச்சிகளை வழங்கி சபையோரை மகிழ்வித்தனர். ஆசிரியை ஸ்ரீமதி கௌசல்யாவிடம் நடனம் பயின்றவர்கள். அரங்கேற்ற வைபவத்துக்கு நீதிபதி பி. ராமகிருஷ்ணன் எம். ஏ., ஐ. ஸி. எஸ். தலைமை வகித்துச் சிறப்பித்தார். ரசிகர்கள் திரளாக வந்திருந்து அரங்கேற்றத்துக்கு உற்சாக மளித்தனர். இவ்விரு நடனமணிகளும் அசோசியேட்டட் எலெக்ட்ரிகல் நிறுவனத்தின் பிரதம எஞ்சினியர் திரு எஸ். வேம்பு அவர்களின் புதல்விகளாவர்.

ஒரு வழி காட்டும் என்று ஒரு முடிவு செய்து கொண்டு சென்னைக்குப் போய் வர நாள் குறித்துக் கொண்டான். அதற்கு முன்னதாக மீண்டும் ஒருமுறை முத்துக் குமாரைப் பார்க்க விரும்பி அவன் வீட்டுக்குச் சென்றான். அப் போது காலை எட்டு மணி இருக்கும். முத்துக்குமார் உள்ளே பலகாரம் சாப் பிட்டுக் கொண்டிருந்தான். வந்திருப் பது இன்னார் என்று மனைவி மூலம் கேள்விப்பட்டதும் அப்படியே இலையி லிருந்து எழுந்து ஓடி வந்தான்.

''வாருங்க மிஸ்டர் ரங்கராஜன்! உள்ளே வாருங்கள் சாப்பிடலாம்'' என்று அழைத்தான்.

''நான் சாப்பிட்டுட்டுத்தான் வர் றேன். நீங்க சாப்பிட்டு வாருங்க. நான் இங்கேயே இருக்கிறேன்'' என் றான் ரங்கராஜன்.

''பரவாயில்லை. உள்ளே வந்து கொஞ்சம் சாப்பிடலாம். இல்லே, பக் கத்திலாவது உட்கார்ந்திருங்கள்'' என்று சொல்லி ரங்கராஜனின் கையைத் தன் இடது கையால் பற்றி உள்ளே இழுத்துக் கொண்டு போனான் முத்துக்குமார்.

உள்ளே போனதும் அங்கே வேறொரு வன் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண் டிருப்பதை ரங்கராஜன் பார்த்தான்.

''யார் தெரியுமா?'' என்று இரண்டு பேரையுமே பார்த்துப் பொதுவாகக் கேட்டான் முத்துக்குமார்.

ரங்கராஜன் திகைத்து நின்றான்.

சாப்பிட்டுக் கொண்டிருந்தவன் ரங்க ராஜனை நோக்கி, ''நமஸ்காரம்'' என்றான்.

ரங்கராஜன் அவனைக் கூர்ந்து பார்த் தான். இன்னார் என்பதையும் தெரிந்து கொண்டான்.

வற்றி மெலிந்த அவன் உடம்பும், ஒட்டிய கன்னங்களும், பாதிக்கு மேல் வழுக்கை விழுந்த தலையும், சலவைக் குப் போடாமல் துவைத்துப் போட் டுக் கொண்டு காவி ஏறிய வெள் ளைச் சட்டையும் சேர்ந்து ரங்கராஜனை ஒரேயடியாகத் திகைக்க வைத்து விட்டதால், பதிலுக்கு 'நமஸ்காரம்' சொல்லக்கூட மறந்து, அவனை ஏற இறங்கப் பார்த்துக் கொண்டே நின்றான்.

ரங்கராஜன் ஒன்றும் சொல்லாமல் பார்த்துக் கொண்டு நிற்பது, அந்த மெலிந்த ஆசாமிக்கு மிகுந்த அச் சத்தை உண்டு பண்ணி விட்டது. அவன் முகம் வெளிறியது; கண்கள் மிரண்டு விழித்தன. வாய் தானாகத் திறந்தது. உள்ளுக்குள் ஒரே நடுக்கம் ஏற்பட்டது. ரங்கராஜன் எந்த நிமிடத்தில் வாயைத் திறந்து; முத்துக்குமாரின் முன்னிலை யில் தன்னைப் பற்றிக் கேவலமாகப் பேசப் போகிறானோ என்று பயந்து சுவாசிக்கவே சிரமப்பட்டான்.

''இன்னும் யாருன்னு தெரியல்லையா? ரெண்டு பேருமே முழிக்கிறீங்களே! உம்?.... மிஸ்டர் ரங்கராஜன் தெரி யல்லையா உங்களுக்கு? நம்ப பாலு!..'' என்று முத்துக்குமார் சொல்லிக் கொண்டிருக்கும்போதே ''தெரியும்'' என்று சொன்னான் ரங்கராஜன். அப் படிச் சொல்லும்போதே அவன் முகம் சலனமற்று இருந்தது.

''மிஸ்டர் ரங்கராஜனை நீங்க மறந் திருக்க மாட்டீங்களே பாலு?'' என் றான் முத்துக்குமார்.

''எப்படி மறக்க முடியும்? அப்போ பார்த்த மாதிரியே இப்பவும் இருக் கிறார்'' என்று தயவுக்குக் கெஞ்சுகிற பாவனை போல் குழைந்து குழைந்து பேசினான் மெலிந்த ஆசாமி.

அப்புறம் ரங்கராஜன் உட்கார்ந்து முத்துக்குமாரின் கட்டாயத்துக்காகக் காப்பியை மட்டும் குடித்தான்.

மூவரும் வெளியே வந்து உட்கார்ந் தார்கள்.

''பாலு நேத்துக் காலையிலேதான் வந்தார். மதுரைக்கு எப்போ வந் தாலும் என்னைப் பார்க்காமல் போக மாட்டார். இவர் நேத்து ராத்திரியே ஊர் திரும்பியிருக்க வேண்டியவர்... நான்தான் கட்டாயப்படுத்தி இருக்கச் சொன்னேன். நீங்க ரெண்டு பேரும் இன்னிக்குக் காலையிலே சந்திக்க ணும்னு இருந்திருக்கு! அதனாலேதான் நேத்துக் கட்டாயப்படுத்தி இருக்கச் சொல்லணும்னு எனக்கு எப்படியோ தோணி யிருக்கு! என்ன சொல்றீங்க?''

முத்துக்குமார் இப்படிக் கொஞ்சம் உல்லாசமாகப் பேசியும்கூட ரங்கராஜ னின் முகத்தில் மாறுதல் தென்பட வில்லை.

பாலு பேயறைந்தவன் போல் ஆகி விட்டான். வெறும் வாயை ஒரு தடவை விழுங்கிக் கொண்டு, மிகவும் அவசரமாக, ''மிஸ்டர் ரங்கராஜன், என்னை மன்னிக்கணும்'' என்று சரணா கதியை அடைந்து விட்டான்.

முத்துக்குமாருக்கு ஒன்றும் புரிய வில்லை. அதேபோல், ரங்கராஜனுக்கும் புரியவில்லை.

''என்னை மன்னிச்சுடுங்கோ. என் கஷ்ட காலம்...'' என்று பாலு மேற் கொண்டும் பேசத் தொடங்கினான்.

''பாலு! எதற்காக இப்படி மன் னிப்புக் கேட்கிறீங்க?'' என்று மிகவும் பரிவான குரலில் தன் அனுதாபத்தை

யெல்லாம் வெளியிடுவது போன்ற மெல்லிய குரலில் கேட்டான் ரங்கராஜன்.

''நான் என்ன செய்தும் அந்த ஐம்பது ரூபாயை என்னாலே இன்னும் திருப்பித் தர முடியல்லே. என் பிழைப்பு அப்படியாயிட்டது, ரங்கராஜன். எல்லாம் முத்துக்குமாருக்குத் தெரியும். மதுரைக்கு வந்தால் உங்க கண்ணிலே எங்கே பட்டு விடுவேனோ என்று திருடனைப் போல ஒளிஞ்சிக்கிட்டு அலையறேன்...''

''பாலு! நீங்க சொல்றதைக் கேட்க எனக்குப் பரிதாபமாக இருக்கு. அதற்காகவா மன்னிப்புக் கேட்கிறீங்க? எப்பவோ குடுத்தது...'' என்றான் ரங்கராஜன்.

''எப்ப குடுத்தாலும் கடன் கடன் தானே?''

''நான் கடனுன்னே நெனைச்சுக் குடுக்கல்லே. பாவம், அதுக்கு மன்னிப்பு வேறே கேட்க ஆரம்பிச்சிட்டீங்களே!... இப்போ எங்கே இருக்கிறீங்க? என்ன செய்யறீங்க?'' என்று ரங்கராஜன் கேட்டான்.

முத்துக்குமார் சொன்னான்: ''இப்போ ரெண்டு மூணு வருஷமாத் திண்டுக்கல்லிலேதான் இருக்கிறார். இன்கம்டாக்ஸ் டிபார்ட்மெண்டில் கிளார்க்.''

''இவ்வளவு பக்கத்திலேதான் இருக்கிறீங்களா? எனக்குத் தெரியாதே!''

''அப்பா எந்த ஊரிலே வேலை பார்த்தாரோ அதே ஊருக்குப் பாலுவும் வந்துவிட்டார்! இந்த ஊருக்கு வந்தப்புறம் தான் சொந்த ஊரிலே இருக்கிற மாதிரி இருக்குன்னு சொல்றார். காவேரிக் கரையிலே பிறந்தவருக்கு இந்த வறண்ட பூமி பிடிக்கப் போயிட்டது.''

ரங்கராஜன் அப்போது நினைத்துக் கொண்டான்: 'ஆளுமே வறண்டு போயிருக்கிறான்.'

பாலு சொன்னான்: ''நீங்க மதுரையிலே இருக்கிறீங்கன்னு தெரியும். முத்துக்குமார்கூட ஒரு தடவை சொன்னார், 'ரங்கராஜனைப் பார்க்கவில்லையா? இங்கேதான் இருக்கிறார்'னு. நான் என்னவோ சொல்லித் தட்டிக் கழிச்சேன்.''

''நான் சொன்னேனா? ஆமா, சொன்னேன்; ஞாபகம் இருக்கு. அது ஒரு வருஷம் இருக்குமே!''

''ஏன் வரலே?''

''எப்படி வருவேன்?''

''பைத்தியக்காரத்தனம்!''

''ஆமா. என்னிக்காவது அந்த ரூபாயைத் திருப்பிக் குடுத்தாத்தான் என் மனசிலே நிம்மதி உண்டாகும். இந்தக் கடனைப் பத்தித் தினமும் நினைப்பேன். நினைக்காத நாளே கிடையாது.''

''பாலு! இந்தப் பேச்சை விடுங்க. நீங்க திருப்பித் தந்தாலும் நான் வாங்கப் போறதில்லே. திரும்பத் திரும்ப நீங்க இதைச் சொல்றது எனக்குக் கஷ்டமா மட்டுமில்லே, பணத்தைத் தவிர வேறு எதையுமே லட்சியம் பண்ணாதவ அல்லது என்னை நீங்க நினைக்கிற மாதிரியும் இருக்கு. வேண்டாம்.. நீங்க இந்த மாதிரி உருமாறி இப்படி மெலிஞ்சிட்டீங்களே என்கிறதைப்பார்த்ததும் எனக்கு ஒண்ணுமே ஓடலே...''

''ரங்கராஜன்! நம்ப பாலு ரொம்ப ரொம்பக் கஷ்டப்பட்டுட்டார். அது பெரிய கதை... அதைப் பத்திப் பேசி என்ன பிரயோஜனம்? வேறே விஷயத்தைப் பேசலாம்...'' என்றான் முத்துக்குமார்.

அந்த நிமிஷத்திலேயே தான் வந்த காரியத்தைப் பேசுவதற்கு ரங்கராஜனால் முடியவில்லை. வரும்போதே உற்சாகமில்லாமல் வந்தான். வந்த இடத்தில் தரித்திரக் கோலத்தில் தன் பழைய கல்லூரித் தோழனைப் பார்த்தான். மனசில் சோர்வும், கஷ்டமும்தான் எஞ்சின. எனவே, திண்டுக்கல்லில் வாழ்க்கை வசதிகள் போன்றவை எப்படி இருக்கின்றன என்பதையும், ஏற்கனவே பாலு எந்தெந்த ஊர்களில் வேலை பார்த்திருக்கிறான் என்பதையும், அவனுக்கு எத்தனை குழந்தைகள் என்பதையும் விசாரிப்பதிலேயே பொழுதைக் கழித்தான் ரங்கராஜன்.

பாலுவும் தன் சரித்திரத்தை அந்த அளவில்தான் சொன்னான். வேலை செய்த ஊர்களைச் சொன்னான். நான்கு குழந்தைகள் என்றான். இப்படிப்பட்ட சாதாரணச் செய்திகளைச் சொன்னதைத் தவிர, தன் குடும்பத்தில் ஏற்பட்ட கஷ்ட நஷ்டங்களையும், தான் அனுபவித்த துன்பங்களையும் பற்றி ஒரு வார்த்தை சொல்லவில்லை. சௌக்கியமாக வாழ்பவனைச் சந்தித்த நிமிஷத்திலேயே அவனிடம் பஞ்சப் பாட்டு பாடினால் அதை அவன் ரசிக்கவே மாட்டான் என்று அவன் கேட்ட கேள்விகளுக்கு மட்டுமே பதிலளித்தான்.

ஒன்பது மணிக்கெல்லாம் ஊருக்குப் புறப்பட்டான் பாலு.

''இன்னிக்கும் இருங்களேன். நாம்ப மூணு பேரும் ஒண்ணாப் பொழுது போக்கலாம். எனக்கும் இன்னிக்கு வேலையில்லே'' என்றான் முத்துக்குமார்.

ரங்கராஜனும் ஆமோதித்தான்.

பாலு இணங்கவேயில்லை. வீட்டிலே சில அவசர வேலைகளைப் போட்டுவிட்டு வந்திருப்பதாகவும், மறு நாள் ஆபீசுக்குப் போக வேண்டியிருப்பதால் அந்த வேலைகளை அன்றே முடித்துவிட

வேண்டும் என்றும் சொல்லி, பிடிவாத மாகப் புறப்பட்டு விட்டான்.

''பாலு! அடுத்த தடவை மதுரைக்கு வர்றப்போ என் வீட்டுக்கு அவசியம் வாருங்க. ஒண்ணும் யோசிக்க வேண் டாம், தெரிஞ்சுதா?'' என்று சொல்லி ரங்கராஜன் அவனுக்கு விடை கொடுத் தான்.

முத்துக்குமாரின் மனைவி உள்பட எல்லோரிடமும் சொல்லிக் கொண்டு, தன்னுடைய கைப்பையையும் தூக்கிக் கொண்டு பாலு புறப்பட்டுப் போனான்.

அவன் வெளியே போனதுமே, ''பாலு இப்படி ஆயிட்டானே! என் னாலே நம்பவே முடியல்லே. உடம் பிலே எலும்புதானே இருக்கு! இப் படியா ஒரு மனுஷன் மாறிப் போயிடு வான்! தலையிலே வழுக்கை. அப்படி என்ன வயதாகிவிட்டது அதற்குள்ளே? கிழவனா மாறிப் போயிட்டானே!...'' என்றான் ரங்கராஜன்.

''நான்தான் சொன்னேனே, அவ னுக்குக் கஷ்டத்துக்கு மேல் கஷ்டம். அவன் அபார மன பலத்திலேதான் நடமாடுகிறான்! வேறொருத்தனா இருந் தால் செத்தே போயிருப்பான்...''

''அப்படி என்ன கஷ்டம்?''

''கஷ்டம் ஒண்ணா ரெண்டா? பெரிய பட்டியலே போட்டுடலாம். என்ன பிரயோஜனம் மிஸ்டர் ரங்க ராஜன்! எனக்கு எப்பவுமே ஒரு அபிப் பிராயம் உண்டு. அது சரியோ தப்போ இன்னொருத்தன் கஷ்டத்தைப் பற்றிப் பேசியோ, மனசுக்குள்ளே நினைச்சோ 'ஐயோ பாவம்'னு வறட்டு அநு தாபம் காட்டுறது எனக்குப் பிடிக் கவே பிடிக்காது. அவன் கஷ்டத் தைத் தீர்க்க நம்மாலே ஏதாவது செய்ய முடிஞ்சால் பேசணும்; இரக் கப்படணும். இல்லேன்னா பேசவே கூடாது. பாலு விஷயத்திலே நீயும் நானும் என்ன செஞ்சிட முடியும்? ஒண்ணும் முடியாது. அதனாலேதான் அதைப் பற்றிப் பேச வேண்டாம் என் கிறேன். ஒண்ணும் செய்ய முடியாமே போலி இரக்கம் காட்டுறதை விட, இரக்கப்படாமலே இருந்துடலாம்.''

''அப்படிச் சொல்லக் கூடாது. ஒருத் தனாலே ஒருத்தனுக்கு எந்த உதவியுமே செய்ய முடியாமல் போயிடாது. பணம் குடுத்தாத்தான் உதவியா? ஆறுதலா ஒரு வார்த்தை சொன்னாலும் உதவி தான். ஒரு நெருக்கடியிலே ஒருவேளை சாப்பாடு போடறதும் உதவிதானே?'' என்றான் ரங்கராஜன். (தொடரும்)

## பார் எழில் பார் நீ!

— செல்ல கணபதி எம். ஏ., —

எழுந்தனன் கதிரவன் இன்னுமேன் தூக்கம்
எழுந்திரு எழுந்திரு துயின்றது போதும்
கழனியில் வாய்க்கால் கரையினில் படர்ந்து
கவினுனில் உணர்வுக் கருவியாய் இயங்கும்
பசும்புல் மேடையில் பனித்துளி வைரம்
பட்டெனத் தெறித்தது பலதுகள் ஆனது
பசுங்கிளி என்னப் பனிப்புல் சிரித்தது
பார்எழில் வண்ணப் பசுமையைப் பார் நீ.

சூடிய மருடம் உடைபட்டு ஓடியும்
சூட்டிக் கொண்ட பசும்புல் மேனி
வாடிய தில்லை வனப்பில் திகழ்ந்தது
வாடி அறியா வனப்பைப் பார் நீ!
வாழ்ந்தவன் தாழ்ந்தால் வருத்தம் கொள்வதோ
மனம் துணிந்து எழுந்தால் வாழ்க்கை கசக்குமோ?
ஆழ்ந்து படிக்கும் பாடம் இதுதான்
அழகிய இயற்கைக் காட்சியைப் பார் நீ.

கவிழ்ந்து கிடந்த கன்னித் தாமரை
கண் திறந் தாற்போல் கனிஇதழ் விரித்தது
அவிழ்ந்து மலர்ந்து குவிந்திடும் நகையில்
அன்பின் ஒழுக்கம் அதுதான் செந்தேன்
வண்ணத் தேனீ உண்ணத் தேன்தர
வாவா வாவென வருந்தி அழைத்ததோ
என்ன இயற்கை இருப்பதைக் கொடுக்கும்
இயல்பெனக் கொண்டதே கதிர்முகம் பார் நீ!

குஜராத் வித்யா பீடத்தைச் சேர்ந்த நான்கைந்து மாணவிகள் ஒரு நாள் காந்தியத் தொண்டரும் வித்யா பீடத்து நிர்வாகத்தை மேற்கொண்டிருந்தவருமான ஸ்ரீ கிஷோர் பாயி அவர்களை அணுகி, "சில இளைஞர்கள் எங்களிடம் குறும்பு செய்கிறார்கள். அவர்களை என்ன செய்வது, எப்படித் தடுப்பது?" என்று கேட்டார்கள்.

கேள்வி பிறந்த மறு கணமே கிஷோர் பாயி விடையளித்தார்: "நீங்கள் செருப்பு அணிவதுண்டல்லவா? அவற்றைக் கழற்றித் தைரியமாகக் கன்னத்தில் கொடுங்களேன்!"

மாணவிகளுக்கு இந்தப் பதில் வியப்பை அளித்தது. 'அஹிம்ஸைத் தொண்டரின் ஆலோசனையா இது? — ஹிம்சை நிறைந்த செயலாயிற்றே செருப்பால் அடிப்பது!' என்று நினைத்தார்கள்.

"இது கொடும் செயல். அஹிம்சை முறை ஏதாவது சொல்லுங்கள்!" என்றாள் ஒரு பெண்.

"எனக்குத் தெரிந்த அஹிம்சை முறை இதுதான். இது உங்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை யென்றால் காந்தியடிகளிடம் போய்க் கேளுங்கள். ஒருவேளை அவர் சரியான ஆலோசனை கூறுவார்" என்றார் கிஷோர் பாயி.

'அதுவும் சரிதான்' என்று எண்ணிய பெண்மணிகள் அப்படியே காந்தியடிகளிடம் சென்றார்கள். அவர்களுடைய முறையீட்டைக் கேட்ட காந்திஜி, "கிஷோர் பாயி செருப்பாலா அடிக்கச் சொன்னார்? சேச்சே! ரொம்பத் தவறு. என்னைக் கேட்டால் கத்தியால் குத்திக் கொன்று போடுங்கள் என்பேன். கன்னிப் பெண்களுடன் தாறுமாறாக நடந்து கொள்ள முயலுபவர்களுக்கு இதுதான் தகுந்த தண்டனை. இதை நான் அஹிம்சையாகவே மதிக்கிறேன். இதில் சிறிதும் ஹிம்சை இல்லை!" என்றார்.

காந்தியடிகளின் அஹிம்சைக் கோட்பாட்டுக்கு அவர்கள் பொருள் புரிந்து கொண்டார்களோ இல்லையோ, பதிலைக் கேட்டு மகிழ்ந்தார்கள்.

## யோசித்துப் பார்த்தால்...

நாத்திகன் ஒருவன் காந்தியடிகளைக் கேட்டான்: "உலகத்தில் எத்தனை கொலை, கொள்ளை! எங்கேயாவது துளி அமைதி உண்டா? இதிலிருந்து என்ன தெரிகிறது? உங்கள் தருமமும் கட்டுப்பாடும் கவைக்குதவாதவை என்பதுதானே?"

"அப்பனே! சற்றுத் தீர யோசித்துப் பார்! தர்மமும் கட்டுப்பாடுகளும் இவ்வளவு இருக்கும்பொழுதே கொலை, கொள்ளை, களவு — என்று என்னவெல்லாமோ அக்கிரமங்கள் நடைபெறுகின்றனவே! தர்மம் என்று ஒன்று இல்லாவிட்டால் இந்த உலகம் எவ்வளவு மோசமாய்ப் போயிருக்கும். அதை யோசித்துப் பார்த்தாயா?"

## வாலில்லா வால்!

சிறுவன் ஒருவன் காந்தியடிகளின் கையைப் பற்றியவாறு உலாவச் சென்றான். வழியில் ஒரு நாயைக் கண்டான். "பார்த்தீர்களா பாபூஜி! நாய்க்கு வால் இருக்கிறது!" என்றான்.

"ஆமாம். நாய்க்கு வால் இருக்கிறது. ஆனால் உனக்கு வால் இல்லையே ஏன்?"

சிறுவன் கடகடவென்று நகைத்தான்: "பாபூஜி! இத்தனை வயதாகியும் உங்களுக்கு ஒன்றும் தெரியவில்லையே! மிருகங்களுக்குத் தான் வால் உண்டு. மனிதர்களுக்குக் கிடையாது. தெரிந்து கொள்ளுங்கள்!" என்றான்.

"தெரிந்து கொண்டேன். ஆனால் நீ ரொம்பப் பெரிய 'வால்' அப்பா!" என்று கூறிச் சிரித்தார் காந்திஜி.

## அண்ணனும் தம்பியும்

ஆசிரமத்திலிருந்த ஆட்டுக்குட்டி, காந்தியடிகள் உலாவப் புறப்பட்டால் ஓடிவரும். அவருக்கு முன்னும் பின்னும் சென்று




தொந்தரவு கொடுக்கும். அதன் காதைப் பிடித்து நிறுத்தி, "இதோ பார்! நீ ரொம்பப் பொல்லாதவன். எனக்குத் தொந்தரவு கொடுக்கிறாய். ஏன் தெரியுமா? உங்க அம்மா பாலை நானும் பங்கு போட்டுக்கொள்கிறேன், பார்! அந்தப் பொறாமையிலே இப்படிப் பண்ணுகிறாய்! சொல்றதைக் கேளு! நீயும் நானும் இனி அண்ணன் தம்பிகள்! ஒரு தாய்ப் பாலைக் குடித்து வளருகிறோம் இல்லையா?" என்று கூறி ஆட்டுக்குட்டியின் முதுகைத் தடவிக் கொடுப்பார்.

ஆட்டுக்குட்டியும் புரிந்து கொண்டாற் போல அங்கிருந்து விலகிவிடும். — ரா.கி.

1

நாய்குரைப்பவனைச் சவுக்கால் அடித்து உட்கார வைப்பது போல் 'காலிங் பெல்' நாராசமாக ஒலித்தது. 'க்வில்ட்'ன் கதகதப்பிலிருந்து உருவிக் கொண்டு கதவைத் திறந்து பார்க்கையில் அவள் நின்று கொண்டிருந்தாள். அடிமனத்தில் வளர்ந்த நினைவையும் மீறி, சருமத் துவாரங்களில் ஆவி பறக்க, உடல் தன்னைச் சுற்றி ஓர் அனல் வட்டத்தைப் போட்டுக் கொண்டது.

'கம் இன்' க்குக்கூடக் காத்திராமல் மளமளவென்று உள்ளே நுழைந்து மேஜையிலிருந்த மதுக் கோப்பைகளை நிரப்ப ஆரம்பித்தாள் அவள். பிறகு, ஒரு கோப்பையை என்னிடம் நீட்டி, கருகருவென்று சிறகடிக்கும் இமைகளுக்குள் சுழலும் நீல விழிகளில் போதை கசிய, 'இது போன்ற மேனர்ஸ் இல்லாத






சிறப்புச் சிறுகதை

அமெரிக்கப் பெண்ணை எப்பொழுதாவது சந்தித்திருக்கிறீர்களா?' என்று கேட்டு விட்டு, அதே சுருக்கில் — என் பதில் அவளுக்குத் தேவையில்லை என்ற லட்சியம் மின்ன — மேஜையிலிருந்த ஒரு புத்தகத்தின் தலைப்பை உரக்கப் படித்தாள். சிறிதுநேர மௌனத்துக்குப் பின், 'இப்பொழுது நான் என்ன சொன்னேன்?' என்று கனவிலிருந்து விழித்ததைப் போல் அவள் கேட்டபோது, அவளது நீல விழிகளின் கடலில் என்னை நான் இழந்து கொண்டிருந்தேன்.

மாலை, மியாமிக் கடற்கரையில், முன்பின் பழக்கமில்லாத அவள் என்னிடம் வந்து, 'ஹாய்!' என்று நெடுநாளையப் பழக்கத்தோடு வரும் ஒட்டுதலுடன் முகமன் கூறியபோது, 'நைட் கிளப்' என்று மனம் போட்ட புள்ளி இன்னும் அப்படியே அழியாமல் இருந்தது. 'வீக் எண்ட்' இப்படித்தான் போகட்டுமே என்று வாதிப்பின்றி ஒருதலைப்பட்சமாக உள் மனசு பேசிய நியாயம், அந்த நியாயத்தினால் உரத்தில் உடலில் தோன்றிய தவிப்பு, அந்தத் தவிப்பில் பொசுங்கிய யோக்கியப் பொறுப்பு... 'என்னை உங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். ஆனால் உங்களை எப்படி எனக்குத் தெரியாமல் இருக்க முடியும்? நீங்கள் தலைசிறந்த விஞ்ஞானி ஆயிற்றே!' என்று அவள் கூறியபோது அவள் குரலில் தொனித்த கேலியின் உள் அர்த்தத்தைப் புரிந்துகொள்ள முடியாமல் தவித்த தவிப்பு... 'கணித பௌதிக நோக்கில் தட்டுப்படாத உண்மையே உலகத்தில் கிடையாது' என்றுதானே அன்று அணு ஆராய்ச்சி மாநாட்டுத் தொடக்க உரையில் கூறினீர்கள்? அதற்குச் சவால் விடவே இங்கு நான் வந்திருக்கிறேன்!' என்று அவள் திடீரென்று சம்பந்தமில்லாமல் உணர்ச்சியோடு சொன்னபோது ஏற்பட்ட திகைப்பு...'ராகவன்! ஏதோ ஒரு சக்தி என்னை உங்களிடம் துரத்துகிறது. இந்த உலகத்துத் தலைவிதியை உங்களைப் போன்ற ஓர் இந்தியரால் தான் நல்ல முறையில் மாற்றி அமைக்க முடியுமென்று அது சொல்லுகிறது' என்று பீடிகையோடு அவள் எதையோ சொல்ல முயன்றபோது, நான் இடைமறித்து, 'யார் நீ?' என்றதற்கு, 'நான் யார்?' என்பது



புரிந்துவிட்டால் அப்புறம் தெரிந்து கொள்ள வேண்டியது எதுவுமே இருக்காதே' என்று அவள் பளிச்சென்று கூறி, நான் குழம்பி அதிசயத்துடன் நோக்குகையில், 'ஏன்? நான் பேசுவது உங்கள் நாட்டு வேதாந்தம்போல் இருக்கிறதா?' என்று புதிர் போட்டு என்னை மேலும் குழப்பியது —

ஆகிய எல்லா நிகழ்ச்சிகளும் மனத்தில் குவிந்தும், முதலில் அவளைப் பற்றிப் போட்ட புள்ளி மட்டும் — அறியாமல் தனியாக நெருடிற்று.

''கோபமா ?''

அவள் மேஜையருகில் நின்றபடியே கேட்டாள். நான் பேசாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன். அவள் ஓடோடியும் வந்து என் தோள்களை இறுகப் பற்றி அழுத்திய வாறே, 'கோபமா என்று கேட்டேன்' என்று கொஞ்சலோடு இழைந்தாள்.

''எதற்கு?''

''நான் நிடுமென்று வந்து உங்களைத் தொந்தரவு செய்வதற்கு....''

''நான் எதிர்பார்த்தேன்....

'' எதை ?''

''உன்னை .....''



கைகளை என் தோளிலிருந்து விடுவித்துக் கொண்டு, எதிரில் வந்து உன்னிப்பாக நோக்கினான் அவன்.

''எப்படி?''

''எது எப்படி ?''

''என்ன எப்படி எதிர்பார்த்தீர்கள் என்று கேட்கிறேன்.....''

''நீ வருவாய் என்று தெரியும்....''

''அதுதான் எப்படி என்கிறேன்.''

நான் சற்றுத் தயங்கினேன். பிறகு அவனைத் தீர்க்கமாகப் பார்த்து, சற்றுத் தாழ்ந்த குரலில், 'கடற்கரையில் பிரிந்த போது அதற்குரிய அறிகுறிகள் உன் கண்களில் ஜ்வலித்தன' என்று கூறியவுடன், அவன் சரேலென்று என்னிடமிருந்து விலகிக் குறுக்கும் நெடுக்குமாக நடக்க ஆரம்பித்தான். 'ரியலி?' என்று ஒரு முறை தலையைச் சிலுப்பினான். பிறகு, 'அப்படி யென்றால் என்னைப் பற்றி எவ்வளவு மட்டமாக எடை போட்டிருக்கிறீர்கள் என்பது புரிகிறது' என்று வறண்ட குரலில் சொன்னான்.

நான் பேசவில்லை. அவன் வேகமாக என்னிடம் வந்து, 'ஹூம் ? அப்படித்தானே ?' என்று கேட்ட போது, குவிந்த என் உதடுகளிலிருந்து புகை வளையங்கள் ஒன்றை ஒன்று துரத்திக் கொண்டு வெளியேறின. அவன் கோபத்தோடு படுக்கையில் தொப்பென்று குப்புற விழுந்தான்.

''ஐ ஆம் ஸாரி !'' சம்பிரதாயப் புரவி வார்த்தைகள் என்னை மீறி வெளியேறின.

''எதற்காக ?'' அவன் முகத்தைத் திருப்பாமலே கேட்டான்.

''உன் மனத்தைப் புண்படுத்திவிட்டேன்!''

அவன் சட்டென்று எழுந்து, முழங்கால்களைக் கைகளால் கட்டிக் கொண்டு ஆடியவாறே, 'மனம்! புண்! ஹியர், ஹியர் !' என்று இளக்காரமாகக் கூறிவிட்டு, 'ஒரு விஞ்ஞானி பேசுகிற பேச்சாக இல்லையே!' என்று ஒரு முத்தாய்ப்பு வைத்தான்.

''ஏன்?'' நான் நிமிர்ந்து உட்கார்ந்தேன்.

''அவை உங்கள் பாடத்தில் வராத விஷயமாயிற்றே! என்று சொன்னேன். 'இந்தா பிடித்துக் கொள்' என்று கைக்கு முன் கொண்டு வந்து நிறுத்தப்படுவதைத் தானே நீங்கள் அங்கீகரிப்பீர்கள்....''

''நீ பேசுவது விளங்கவில்லை....''

''மனம், அதில் ஏற்படக் கூடிய புண், இவைகளைப் பற்றி எந்த ஒரு விஞ்ஞானியும் ஆராய்ச்சி செய்வதாகத் தெரியவில்லை!''

''விஞ்ஞானத்தை ஏன் அநாவசியமாக வம்புக்கு இழுக்கிறாய்?''

''உங்களுக்குக் கோபம் வந்துவிட்டதா?''

நான் உக்கிரமாக அவனை முறைத்துப் பார்த்து விட்டுப் படுக்கையில் விழுந்து, முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டேன். அவ்வேளையில், அச்சூழ்நிலையில் அவனுடைய விச்சோடிப் பேச்சு, தகரத்தை ஆணியால் கிழிப்பது போல் இருந்தது. தனி அறையில், இரவின் ஏகாந்தத்தில், மூன்றாவது மனிதனின் நிழல் போல் படிந்து உள்ளத்தை நெருடிற்று.

''நீ என்னை நாடி வந்திருப்பதின் நோக்கத்தை வெளிச்சமாகச் சொல்லித் தொலைத்தால் நான் நன்றியுடையவனாக இருப்பேன்!'' தலையணைக்குள் முகத்தைப் புதைத்தவாறே எரிச்சலுடன் பேசினேன்.

''ஓ ! வெளிச்சமாகச் சொல்ல வேண்டுமா ? அப்படியென்றால் உங்களைக் குற்றவாளிக் கூண்டில் ஏற்றியாக வேண்டும் !''

நிமிர்ந்து படுத்து, கடுமை பொங்கும் குரலில், 'என்னையா ?' என்று நான் கேட்ட போது, அவன் விழிகளிலும் ஒரு தீவிரம் கலந்த எச்சரிக்கைப் பார்வை தேங்கி நின்றதைக் கவனிக்காமலிருக்க முடியவில்லை.

'' நீங்கள் இல்லை என்றால் உங்கள் ஜாதியை !''

''ஜாதியா ?''

''அதுதான், அணுவைத் துளைக்கும் ஜாதி. எலக்ட்ரான், புரோட்டான்களை எண்ணும் ஜாதி. முதலில் ஹிரோஷிமாவைப் பொசுக்கி, இன்று உலகத்தையே சுட்டுப் பொசுக்க முனைந்து நிற்கும் கொலைகார ஜாதி !''

நான் துள்ளி எழுந்து உட்கார்ந்தேன். அவனது வெறிப் பேச்சு, என் நரம்புகளை முறுக்கேற்றின. இருந்தாலும் அடக்கிக் கொண்டு, ''ஏதோ ஒரு சக்தியால் உந்தப்பட்டு என்னிடம் வந்திருப்பதாக முதலில் சொல்லி விட்டு, இப்பொழுது ஒரேயடியாகப் பிதற்றுகிறாயே!'' என்று கூறினேன்.

''டியர் டாக்டர் ராகவன்!'' என்று ஆரம்பித்த போது அவனது குரலில் இலேசான நடுக்கம் இருந்தது. அந்நடுக்கத்துடன் அவன் போராடி, அதைச் சீராக்க முயன்ற போது, குரல் உச்ச ஸ்தாயியில் ஒலித்தது.

''டியர் டாக்டர் ராகவன் ! எல்லோரையுமே ஏதோ ஒரு சக்தி விரட்டத்தான் செய்கிறது. சாதாரண மனிதனை அது விரட்டும் போது அவன் மட்டும் ஓடுகிறான். ஆனால் அதுவே ஒரு விஞ்ஞானியை விரட்டும் போது...''

''விரட்டும் போது ?''

''அவன் தன்னுடன் அப்பாவி உலகத்தையும் இழுத்துக் கொண்டு ஓடிப் பாதாளத்தில் கொண்டு போய்த் தள்ளி விடுகிறான்.''

''நான்சென்ஸ் !''

நான் உறுமினேன். எழுந்து ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தேன். அவனும் எழுந்து மேஜையருகில் சென்றான். உதட்டில் கவிந்த இன்னகையுடன் 'ராகவன்!' என்றான்.

''ராகவன்! நாம் அழியப் போகிறோம்!''

நான் படுக்கையிலிருந்து எழுந்து விட்டேன். இவனை இவ்வளவு நெருங்க விட்டது எவ்வளவு அறிவீனம் என்று முதல் முறையாக எனக்குத் தோன்றியது.

''நாம் அழிவின் முகட்டில் இருக்கிறோம். கும்பல் கும்பலாக வெந்து மடியப் போகிறோம். நம்மைச் சூழ்ந்திருக்கும் கடல்களெல்லாம் பற்றி எரியப் போகின்றன.....''

''ஹியர் நான்சென்ஸ் !''

''இந்நாட்டிலிருக்கும் வானைத் தொடும் கட்டடங்களிலிருந்து எழும் தீயின் நாக்குகள் சூரியனைத் தீண்டி, 'பார்! நாங்கள் எவ்வளவு உயர்ந்து விட்டோம்!' என்று தோள் தட்டப் போகின்றன.....''

''ஹிஸ்டீரியா !''

''இல்லை, ராகவன் ! இது நடக்கப் போகிறது. இன்றோ, நாளையோ, நாளை மறுதினமோ நிச்சயமாக நடக்கப் போகிறது.

# இப்பொழுது நடைபெறுகிறது

சென்னை
காமதேனு
நடராஜா
மகாராஜா
கிருஷ்ணவேணி
மற்றும்
தென்னாடெங்கும்




பாரத் மூவீஸ்

# அஞ்சல் பெட்டி 520

கதை வசனம் டைரக்ஷன்: T.N. பாலு

| பாடல்கள் | இசை | காமிரா |
| --- | --- | --- |
| கண்ணதாசன்-வாலி | கோவர்த்தனம் | E.N. பாலகிருஷ்ணன் |

ஸ்டுடியோ: வாசு ஸ்டுடியோஸ்

ELEGANT

பயணம் நம்மை அழைக்கிறது, ராகவன், பயணம் நம்மை அறைகூவி அழைக்கிறது!''

''கொஞ்சம் குறைத்துக் குடித்திருந்தால் பயணம் அப்படி அழைக்காது!''

''பயணம் நம்மை அழைக்கிறது.... அவ்வழைப்பை ஏற்று நாம் போவதற்கு முன்னுல், ஒரு முறை, ஒரே ஒரு முறை...''

''தேர் யூ ஆர்! குட் கேர்ல்! அதைத்தான் நானும் சொல்ல வந்தேன்!''

''எதை ?'' என்று அவன் கேட்டு விட்டு இமைகளைத் திறந்த போது விழி வெள்ளைகளில் செவ்வரி படர்ந்து ஜிவ்வென்றிருந்தது.

நான் மௌனித்தேன். இப்படித் திடீரென்று பிதற்றல் நின்று எதிர்க் கேள்வி போடுவான் என்று எதிர்பார்க்கவில்லை.....

அவன் எனது நிலையைப் பார்த்துக் குறும்புப் புன்னகை ஒன்றைச் சிந்தி விட்டு —

''டாக்டர், ராகவன்! நான் இன்னும் குடிக்க ஆரம்பிக்கக்கூட இல்லையே! அதற்குள் போதை ஏறிப் பிதற்றுவதாக ஏன் மனப்பால் குடிக்கிறீர்கள்? கொஞ்சம் பொறுங்கள்'' என்று கூறி, எழுந்து மேஜையின் அருகில் சென்றுன். சர்ரென்று சத்தம் வரும்படி திரவத்தை உறிஞ்சிக் கொண்டே அவன் திரும்பும் போது —

''ஒரே ஒரு முறை என்று நான் எதைச் சொல்ல வந்தேன் என்றுல்....''

நான் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டேன்.

அவன் தொடர்ந்தான். ''பயணத்தின் அழைப்பை ஏற்றுச் செல்லுமுன், உங்கள் ஜாதிக்காக ஒரு முறை, ஒரே ஒரு முறை, ஜீஸஸ் கூறியது போல், 'ஆண்டவனே! அவர்களை மன்னித்து விடு! அறியாமல் செய்து விட்டார்கள்!' என்று பிரார்த்தனை செய்ய வேண்டுமென்றுதான் சொல்ல வந்தேன்....''

அப்படிச் சொல்லி விட்டு அவன் சிரித்த சிரிப்பு அறைச் சுவரெல்லாம் மோதித் தெறித்தது.

'வெல்' என்று நான் ஒரு முறை தோள்களைக் குலுக்கிவிட்டு எழுந்து மேஜையருகில் சென்றேன். இரவு விரயமாகிக் கொண்டிருந்ததை எண்ணி நெஞ்சு விம்மிப் புடைத்தது. ஒரு கிண்ணம் காலியானவுடன் சாவதானமாக ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்து, வலிய வரவழைத்த புன்னகையுடன், 'சூழ்நிலையைக் கமறும்படி செய்து விட்டாயே!' என்று சொல்லி வைத்தேன். அவனும் மேஜையருகில் வந்து நின்று, மீண்டும் கோப்பையை நிரப்பியவாறே, 'போகட்டும். நான் இந்த அறையின் சூழ்நிலையைக் கமறடித்ததோடு நின்று விட்டேன். ஆனுல் நீங்கள்? நிலம், நீர், ஆகாயம் என்று ஒவ்வொன்ருக உலகத்துச் சூழ்நிலையையே நாசமடித்து வருகிறீர்களே! என்ன டாக்டர் ராகவன்?' என்று அவன் ஓரப் பார்வையால் பார்த்துக் கொண்டே கேட்ட போது, நான் வெகுண்டு —

''அரசியல் உபாயங்களுக்கு உட்பட்டவர்கள் நாங்கள். அரசுகளைப் பகைத்துக் கொண்டு நாங்கள் வாழ முடியாது. எங்கள் உழைப்பை அவர்களுக்கு அர்ப்பணிப்பது தான் நியாயம்....''

## உவகை தரும் உவமை

தென்னை மரத்துக்கு அதன் அடிப்பாகத்திலே அழுக்கு நீரை ஊற்றினுலும், அதற்குப் பதிலாகச் சில காலம் கழித்துச் சுவையுள்ள இளநீரைக் குலை குலையாகக் காய்த்துத் தலை வழியாகத் தருகிறது! அதாவது அடிப் பாகத்திலே நீரை ஊற்றினுல் முடிப் பாகத்திலே இளநீரைத் தருகிறது.

அது போல நாம் ஒருவருக்கு ஓர் உதவியைச் செய்தால், அதற்குப் பதில் உதவி எப்பொழுது கிடைக்கும்? எவ்வளவு கிடைக்கும் என்று சொல்ல முடியாது. ஆனுல் நிச்சயமாக நாம் செய்த உதவியை விடக் கூடுதலாகவே கிடைக்கும்!

-ஔவையார் - மூதுரை



''இது அர்ப்பணமல்ல. விற்பனை! விஞ்ஞானத்துக்கும் அர்ப்பணத்துக்கும் சம்பந்தமில்லை....''

அவன் விழிகளில் கேலி கொப்பளித்தது. நான் ஓய்ந்து விட்டேன்.

அவன் ஓயாமல் குடித்துக் கொண்டே இருந்தான்.

அர்த்தமுள்ள பேச்சால் இரணக் காக்க வைக்கும் இங்கிதமில்லாக் கலையை அவன் எங்குதான் கற்ருனோ!

தன்னை இழந்து அவன் கட்டிலில் தொய்ந்து விழும் வரை நான் விளக்கையே வெறித்துக் கொண்டிருந்தேன்.

### 2

இரவு ஸ்தம்பித்து நின்றது. என்னுள் இருந்த எரிமலையின் வாய் அனலைக் கக்க ஆரம்பித்தது. உடலில் ஒரு லேசான நடுக்கம் கண்டு, மூளையின் கருவை யாரோ கண்டி இழுப்பது போன்ற உணர்வு ஏற்பட்டது. எழுந்து மேஜையருகில் செல்வதுகூடப் பிரம்மப் பிரயத்தனமாக இருந்தது. கால்கள் துவள, மேஜையைப் பிடித்து நின்று கொண்டே கட்டிலைத் திரும்பிப் பார்ப்பதும், பிறகு கண்ணுடியைப் பார்ப்பதும், கண்ணுடிக்குள்ளும் கட்டில் தெரிவதைக் கண்டு மிரண்டு உயரே பார்ப்பதும், அந்நிலையில் பின் மண்டையில் பளிச்சிடும் வலியால் தலை கவிழ்வதுமாக எத்தனை நேரம் அப்படியே

நின்று கொண்டிருந்தேனே! தாகம் வறட்டிற்று! விரல்களுக்குள் அகப்பட்ட புட்டியின் வாய் உதடுகளுக்குள் திணிக்கப்பட்டு, அதிலிருந்து பாயும் திவலைகள் நாவையும், தொண்டைக் குழாயையும், குடலையும் பொசுக்குவதை உணரும் போதே, மண்டைக்குள் ஓர் அவுட்டு வெடித்து மூளை பஞ்சு பஞ்சாய் வாரி இறைக்கப்பட்டது.

ரஸாயனச் சேர்க்கையிலான நான், தனித்தனியாகப் பிரிக்கப்பட்ட அடிப்படைக் கூறுகளாகச் சிதைந்து சிதறினேன்.

ஆனால் அடுத்தகணமே சிதறல்களை ஒன்று திரட்டி, என்னை நானாக்கி, என் தோள்களில் ஏறி அமர்ந்து 'போ, அங்கே !' என்று கட்டிலைச் சுட்டியது ஒரு மிருகம்.

கட்டிலை நெருங்கும்போது அவன் துள்ளி எழுந்து என் கைகளைப் பற்றி இழுத்த வாறே, ''டாக்டர் ! விஞ்ஞானம் மெய்ஞ்ஞானம் எல்லாமே இது போன்ற ஒரு தருணத்துக்கு முன்னால் எப்படி வாய் புதைத்து நின்று விடுகின்றன பார்த்தீர்களா ?'' என்று கலகல வென்று சிரித்தான். பிறகு, ''வெற்றி உங்களுக்குத்தான்'' என்று என் கன்னத்தைக் கிள்ளினான். நான் அவன் கண்களையே கவனித்துக் கொண்டிருந்தேன். ''ஆனால் ஒரு நிபந்தனை....'' அவன் தொடர்ந்தான். ''என்ன?'' என்றேன். ''ஒரே ஒரு கேள்விக்கு மட்டும் பதில் சொல்லி விடுங்கள் !'' என்றான். நான் சரி என்று தலை அசைப்பதற்கு முன்பே, அந்தக் கேள்வியை அவன் வீசிவிட்டு இறுமாப்புடன் நோக்கினான்.

''ராகவன் ! உங்கள் பௌதிக நோக்கில் சூரியன் என்பது என்ன?''

முதுகில் சூடு பறக்க ஆற்று மணலைத் தேய்ப்பது போல் ஓர் உணர்வு ஏற்பட்டது. அவனை உதறி விட்டு எழ முயன்றேன். கால்கள் பின்னின.

''ஹும் ! நீங்கள் பேச மாட்டீர்கள். நான் சொல்லுகிறேன். சூரியன் என்பது வாயுக் கோளம். ஆனால் வாயுவின் இயல்பான சிதைந்து பரவும் தன்மையை மீறி சூரியன் ஒரு கட்டுக்கோப்புக்குள் இயங்குவதை நான் கற்பு என்கிறேன். நீங்கள் என்ன கூறுகிறீர்கள் ?''

நான் உதற உதற அவன் மேலும் இறுக என்னைப் பற்றிக் கொண்டான். பாதி திறந்திருந்த அவனது இமைகளுக்குள் 'அகப்பட்டுக் கொண்டாயா ?' என்று கொட்டை எழுத்துக்களில் எழுதியிருந்தது.

''ஏன் இந்த மௌனம்? விஞ்ஞானத்துக்கும் கற்புக்கும் என்ன சம்பந்தம் என்று எண்ணுகிறீர்களோ?''

நான் திமிறிக் கொண்டு அவன் பிடியிலின்றும் என்னை விடுவித்துக் கொண்டேன். அவன் படுக்கையில் உருண்டு பயங்கரமாகச் சிரித்தான். ''கற்பு இல்லாத விஞ்ஞானம் இந்த உலகத்தை நாற அடித்து விட்டது. வெட்கம், வெட்கம் !''

''வாயை மூடு !''

நான் காலால் தரையை ஓங்கி உதைத்தேன். அவன் அதிர்ந்து, என்னை அகல விரித்துப் பார்த்து விட்டு, ''ஐ ஆம் வெரி ஸாரி'' என்று கூறி, கண்களை மூடி அசையாமல் கிடந்தான். பிறகு ''ராகவன், என்னை மன்னித்து விடுங்கள்'' என்றான்.

அவன் கிடந்த கோலமும், மூடிய நிலையிலேயே படபடக்கும் இமைகளும், குடித்து ரத்தச் சிவப்பேறிய உதடுகளும் என்னுள்ளிருந்த மிருகத்துக்குச் சாமரம் வீசின. அடுத்த கணம் ஒரே தாவில் கட்டிலில் இருந்தேன்.

''ஹ! நீ அகப்பட்டுக் கொண்டு விட்டாய்!''

''ப்ளீஸ் ! டோன்ட்... ப்ளீஸ்....!''

''என்னை மீறிய விஷயம். என் கையில் ஒன்றுமில்லை. நான் இயக்கப்படுகிறேன்..... விசையின் அதிபதி நானல்ல. உன்னை விரட்டிய சக்தி என்னையும் துரத்துகிறது. புயலில் அலைக்கழிக்கப்படும் துளி நான். என்னை மன்னித்து விடு. என் கையில் ஒன்றுமேயில்லை.''

''ஞானம். அவ்வளவும் ஞானம்!''

''ஒப்புக் கொள்கிறேன். ஆனால் என்னை மன்னித்து விடு !''

''உலகத்தின் தலைசிறந்த விஞ்ஞானி என் காலடியில் மன்னிப்புக் கேட்கிறார்.''

''உண்மை! ஒப்புக் கொள்கிறேன்...''

''ஹா ! எவ்வளவு தன்னடக்கம்! இல்லை, சரணாகதி !''

''வாஸ்தவம்....!''

''இந்நிலையில் எதையும் ஒப்புக் கொள்வீர்கள் !''

''ஆம், ஒப்புக் கொள்கிறேன்.''

''ஆனால், இந்தச் சரணாகதிக்கு ஈடாக நீங்கள் கேட்பது ?''

''புரிகிறது.....''

''புரிந்தே தவறும் தனிப் பிறவி மனிதன்!''

''உன்னை வெல்ல முடியாது!''

''டாக்டர் ராகவன்! நீங்கள் மறுத்தாலும் மறுக்கா விட்டாலும் ஒன்றை மட்டும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். இயற்கையின் கன்னிமையை — கற்பை — உங்கள் விஞ்ஞான மூளையின் கூர்மையால் ஊடுருவி ஆராய்ந்து விட முடியுமென்று கனவு காணுகிறீர்கள்...''

''சரி!''

''உதயம், அஸ்தமனம். இவைகளை அலகாக்கி, பிடித்து நிறுத்த முடியாமல் வழுக்கிக் கொண்டு ஒரே சீராக ஓடும் கால வெள்ளத்தில் மிதக்கும் துளிகள் நாம்...''

''ஓ!''

''துளி, முழுமையைக் கவ்வித் தன்னுள் அடக்கிக் கொள்ள நினைப்பதும், வால் தலையை விழுங்க விழைவதுமாக, நிராளியை மீறி, அகங்காரச் செயல்களால் படுகுழியின் விளிம்பில் உயிரினக் கூட்டத்தையே கொண்டு போய் நிறுத்தி யிருக்கிறது உங்கள் விஞ்ஞானம்....''

''நியாயமற்ற பேச்சு. ஆயினும் அற்புதமான உவமானம்....''

'' 'ஏன்?' என்ற விவேகத் தேடலுக்குப் பதிலாக 'எப்படி' என்ற வீம்பு கலந்த ஆராய்ச்சியினால் வந்த வினை...''

''புரியவில்லை...''

''பொன் வாத்தும் குடியானவனும் என்ற பால பாடம் தெரியாதா உங்களுக்கு?''

''ஓ! அதுவா!... மார்வெலஸ்!''

''இன்னும் எவ்வளவோ சொல்ல முடியும்.''

''நீ ஒரு மேதாவி.... உன்னால் கையாளப் படும் ஒவ்வொரு வார்த்தையும் உன் உச்சரிப்

தரத்தினை விரும்புவோர், உயர்ரகத்தினை விரும்புவோர், எம்ப்ராய்டரியில் மிகச் சிறந்ததை விரும்புவோர் என்றும் தேடுவது



வீணா

Veena

எம்ப்ராய்டரீஸ்

தயாரிப்பாளர்கள்:
S. S. M. பிரதர்ஸ் (பி) லிட்.,
த. பெ. எண். 8, குமாரபாளையம் போஸ்ட் (ஈரோடு வழி)

பிரத்யேக ஸ்டாகிஸ்டுகள்:
அமர்ஜோதி டிரேடர்ஸ், 99, கிடங்கு தெரு, சென்னை-1.
M. A. பழனியப்ப முதலியார் & சன்ஸ்,
குமாரபாளையம்





உங்களுக்கும்
உங்கள் நண்பர்களுக்கும்

மகிழ்ச்சி அளிப்பது......
நீடித்த நறுமணம் வீசுவது




Priya
PERFUME

பிரியா

வாசனை

புத்தம் புதிய மலர்களின்
வாசனைக்கு ஒப்பானது

பெங்கால் கெமிகல்

கல்கத்தா ○ பம்பாய் ○ கான்பூர் ○ டெல்லி

# இலவசம்




ஒரு ஜோடி
பிக்னிக் டம்ளர்கள்
ஒவ்வொரு 450 கிராம் டின்
கோகோ மால்டீன்




ஒரு
புதிய
ருசியும் மணமும்
கூடியது

இப்பொழுது
அதிக ஊட்ட
பொருள்களுடன்
கூடியது



இந்தியாவின் சொந்தம்
இந்தியாவின் பெருமை

# கோகோ மால்டீன்

பூரண சத்துணவு

கோகோவும் தேனும் மிகுந்தது

நவீன விஞ்ஞான ஆராய்ச்சியின் படைப்பு



சூடோ குளிரோ கோகோ மால்டீன் சிறப்பானது

கோகோ மால்டீன் லபாரேடரீஸ்

யின் புது மெருகை ஏற்றிக் கொள்கிறது. நீ உதடுகளைக் குவித்துப் பேசும் அழகுக்குக் காணிக்கையாக இந்த உலகத்தையே உன் காலடியில் கொண்டு வந்து கிடத்தலாம்.... ஆனால்.... ஆனால்....''

''ஆனால்?''

''கற்பு, கற்பு என்று ஏன் நடுவில் பூச்சாண்டி காட்டுகிறாய்?''

''சூரியனின் கற்பு என்றேன்...''

''அதுதானே பார்த்தேன்...''

''உங்கள் பாடத்தில் வராத கற்பு! டெலஸ்கோப்புக்குள் அடங்காத. சோதனைக் குழாய்க்குள் புகுத்த முடியாத. அமிலங்களின் உக்ரத்தினால் போகக்கூடியாத க...ற்...பு!''

''பல்லைக் கடிக்காதே! எவ்வளவோ கோடி மைல்களுக்கு அப்பால் இருக்கும் அந்தக் கற்பு போகவில்லை என்ன, போகங்காவிட்டால் என்ன?''

''நீங்களும் நானும் இப்பொழுது பேசிக் கொண்டிருப்பதே அந்தக் கற்பின் சக்தியால் தான்....''

''ஹூம்... திருப்பித் திருப்பிச் சொன்னதையே சொல்வதற்கு அலுப்பாக இல்லே?''

''எனக்கு அலுக்காது...''

''எனக்கு அலுத்து விட்டது...''

''நான் அதைப் பொருட்படுத்தப் போவ இல்லே...''

''குருதி பிசகுகிறது.''

''குருதிசேர்ந்தால்அல்லவா பிசகுவதற்கு?''

''இப்பொழுது சேர்ந்தாக வேண்டும்.''

''சேராது.''

''விளையாடாதே!''

''தோ....தூர நில்லுங்கள்!''

நான் கொதி நிலையை அடைந்தேன். துவளும் இடையைச் சாய்த்து அவளது இடுப்பைச் சுற்றிக் கைகளை வளைத்தபோது அவள் ஒரே திமிறலில் என்னை விசிறி எறிந்தாள். 'ணங்' கென்று பின் மண்டை தரையில் மோதியது.

''நீ இவ்வேளையில் என் ஆளுகைக்கு உட்பட்டவள் என்பதை மறந்து விடாதே!''

''டாக்டர் ராகவன்! தங்கள் நிலைக்காக நான் பரிதாபப் படுகிறேன்...!''

குப்பென்று என் முகம் சிவந்தது. நெற்றிப் பொட்டுக்கள் தெறித்தன. பலத்தை எல்லாம் ஒருங்கே திரட்டிக் குபீரென்று பாய்ந்து எழுந்தேன். அவள் கட்டிலைச் சுற்றி ஓடினாள்.

''ப்ளீஸ், டோன்ட்... ப்ளீஸ்!''

''நீ என்னை அளவுக்கு மீறிச் சோதித்து விட்டாய்!''

நானும் கட்டிலைச் சுற்ற ஆரம்பித்தேன்.

''விஷயம் தெரிந்தால் என்னைத் தொட மாட்டீர்கள்!....''

ஒரு கணம் தயங்கி நின்றேன். ஆனால், அடுத்த கணமே, 'எதுவானாலும் பரவாயில்லை!' என்று சொல்லிக் கொண்டே அவளைத் துரத்தினேன்.

''நான், நான்... கதிர் வீச்சினால் பாதிக்கப்பட்ட....'' அவள் கூறியது என் காதிலேயே விழவில்லை.

''டாக்டர் ராகவன்! என்னை நெருங்காதீர்கள்.... நான் கதிர் வீச்சினால் பாதிக்கப்பட்ட நோயாளி!''

# கிராமமே பங்கேற்று நடிக்கும் நாடகம்!



1400 ''நடிகர்களும் நடிகையர்களும்'' பங்கேற்கும் நாடகத்தைப் பார்க்க விரும்புகிறீர்களா ?— மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த ''ஓபரா மீர்கா'' என்னும் கிராமத்துக்குச் செல்லுங்கள். பத்து ஆண்டுகளுக்கு ஒரு முறை அதிசயமான முறையில் நடைபெறுகிற இந்த நாடக விழாவைக் காண ஐந்து இலட்சம் மக்கள், உலகின் பல பகுதிகளிலிருந்தும் திரளுகிறார்கள்.

பனி படர்ந்த பவேரிய மலை அடிவாரத்தில் அமைந்திருக்கிறது, 'ஓபராமீர்கா' கிராமம். இந்த ஆண்டு திருமணம் செய்து கொள்ள, இக்கிராமக் கன்னிகள் தயங்குகிறார்கள். ஏன் தெரியுமா? நாடக விழாவில் கன்னிகளே பங்கெடுத்துக் கொள்ளலாம் என்ற சம்பிரதாயம் வழங்கிவருகிறது.

1970 மே 18ஆம் தேதி முதல் நாள் நாடகம் தொடங்குகிறது. இயேசுநாதர் அநுபவித்த துன்பங்கள், அவரது மரணம் ஆகியவற்றை இந்நாடகம் சித்திரிக்கும். கிராம மக்கள் தொகையில் மூன்றில் ஒரு பகுதியினர், இந்நாடகத்தில் பங்கேற்கிறார்கள். நாடகம், ஆறு மணி நேரம் நடைபெறும்.

இந்த நாடகத்தில் நடிப்பது லேசான காரியம் அல்ல. வெறும் பொழுது போக்குகளில் ஈடுபடாமல் ஒத்திகைகளில் தீவிரமாக இறங்குவார்கள். ஏசுவும் அவரது சீடர்களும் அடைந்த துன்பத்துக்கு ஈடான துன்பத்தை நாடகத்தில் பங்கு பற்றுபவர்களும் அநுபவித்து விடுவார்கள். அத்தனை ஈடுபாட்டுடன் உணர்ச்சிவசப்பட்டு நடிப்பார்கள். இளைஞர்கள் சவரம் செய்து கொள்ள மாட்டார்கள். தாடி மீசையும், தலைமயிரும் வளரும்படியாக விட்டு விடுவார்கள். ஏசு காலத்தில் வாழ்ந்த மக்களைப் போல் காட்சியளிப்பார்கள்.

இந்த நாடக விழா தொடங்கியது எப்படி ? 1632ஆம் ஆண்டில் பயங்கர 'பிளேக்' நோய் இக்கிராமத்தையே அழிக்க முற்பட்டது. அப்போது சிலுவையில் இயேசுநாதர் அறையப்படும் கதையை நாடகமாகப் பத்தாண்டுகளுக்கு ஒருமுறை நடிப்பதாக, கிராமத் தலைவர்கள் ஒன்றுகூடி 'சபதம்' செய்தார்கள். 'பிளேக்' நோயின் தாக்குதலிலிருந்து கிராமத்தைப் பாதுகாக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டனர். 1633ஆம் ஆண்டில் முதன் முதலில் கிராமத்தினர் இந்நாடகத்தை அரங்கேற்றினர். இந்நாடகத்துக்கெனத் தனியாக உரையாடல்களோ, இசையோ அமைக்கப்படவில்லை. 'பைபிள்' நூலிலிருந்து புராதன உரையாடல்களையே கிராம நடிகர்கள் பயன்படுத்துகிறார்கள். கடந்த முந்நூறு ஆண்டுகளில் நடிப்புக் கலையில் கிராம மக்கள் பெரிதும் தேர்ந்து விட்டார்கள். முக்கியமான பாத்திரங்களைப் பரம்பரையாக ஏற்று நடிக்கும் குடும்பத்தினரும் உண்டு.

ஏறத்தாழ நான்கு மாதங்களுக்கு நடைபெறுகிற இந்நாடக விழாவில் நடிக்கும் ''தாடி வளர்ந்த'' இளைஞர்கள் நடிப்பதற்காகச் 'சல்லிக் காசு'ம் வாங்க மாட்டார்கள். இயேசுநாதராக நடிப்பவருக்கு மட்டும் இறுதியில் 1,750 டாலர் கொடுப்பது வழக்கம்.

''வெறும் நாடகத்தைவிட பன்மடங்கு உயர்ந்தது, இந்த நாடக விழா. ஏனெனில், சிறு வயது முதல், இதனைப் புனிதமாகக் கருதுகிறோம்'' என்று இர்மிடெக் என்னும் பெண் கூறுகிறார். 1960ல் கன்னி மேரியாக நடிக்கத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் இவர். — லைல்ஸ் எம். ஆடன் — (யூ. பி. ஐ)

பின் மண்டையில் சுரீர் என்றது: இரண்டு பாதங்களிலும் கூரிய ஆணிகள் அறையப் பட்டன. ''நீ.....நீ..... நீயா?'' என்று கைகளை ஆட்டிக் கொண்டே பின்னால் நகர வேண்டும் என்ற எண்ணத்தைச் செயலாக்க முடியவில்லை. அவள் வெற்றிச் சிரிப்பொன்றை இதழ்க்கடையில் பின்னவிட்டுக் கொண்டே நெற்றி வியர்வையை வழித்தாள். பிறகு ஒவ்வோர் அடியாக முன் வைத்து என்னை நெருங்க ஆரம்பித்தாள். நான் பின்வாங்க நினைத்தேன். முடியவில்லை. 'நெருங்காதே' என்று எச்சரிக்கை விட முனைந்தேன். இயல வில்லை. ஓவென்று கத்தி ஊரைக் கூட்ட வேண்டுமென்று நினைத்து வாயைப் பிளந்த போது, நாவே இல்லாமல் போயிருந்தது. அவள் நெருங்கிக்கொண்டிருந்தாள். ''கற்பு!'' என்று கூறுவது போல் அவள் உதடுகள் குவிந்திருந்தன. என் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்து கன்னத்தில் விழாமல் நெற்றியை நோக்கி ஏறிற்று. கண்கள் வயிற்றுக்குள் வந்தன. கைகள் சுழன்று காதுகளில்போய் ஒட்டிக்கொண்டன. வாய் இருந்த இடத்தில் வழுக்கையாக ஒரு மேடு தோன்றியது.

அவள் அட்டகாசமாகச் சிரித்துக்கொண்டு என் அருகில் நின்றாள். அவளது பாதத்தின் மேல் பாகம் என் நெற்றிக்கு எதிரில் நின்றது. அதற்கு மேல் அவளது கால்கள், தொடை, வயிறு, மார்பு, தோள்கள் என்று வானத்துக்கும் பூமிக்குமாக அவள் நின்று கொண்டிருந்தாள். நான் நிமிர்ந்தேன். உச்சிக்கு மேல் உயர் வெளியில் என் பார்வை பதிந்தது. சூரிய கோளத்திலிருந்து இரு செக்கர் விழிகள் இடம் பெயர்ந்து மெள்ள மெள்ளக் கீழே இறங்கி வந்து என் நெஞ்சுக்குள் புகுந்தன.

நான் இல்லாமல் போனேன்.

## 3

ஜன்னல்களின் திரைச் சீலைகள் விலக்கப் படும் ஓசை தெளிவாகக் கேட்கிறது. டெலிபோன் மணி அடிக்கிறது. யாரோ ''டாக்டர் ராகவனா? இன்னும் ஒரு மணி கழித்துக் கூப்பிடுங்கள்!'' என்று கூறி ரிஸீவரைத் 'தடங்' கென்று வைக்கிறார்கள். நெற்றியில் பனிக் கட்டி உருகிக் கண்களிலும் கன்னத்திலும் வழிகிறது. இமைகளுக்குள் விழிகள் புரண்டு கொடுக்கின்றன.

''ஆர் யூ ஆல் ரைட்?''

குரல் பழக்கப்பட்டதாக, எப்பொழுதோ எங்கேயோ கேட்டதாக இருக்கிறது. கன்னங்களை யாரோ தடவுகிறார்கள். இதமாக இருக்கிறது.

மல்லுக்கு நின்று இமைகளைத் திறந்த போது, எல்லாமே மஞ்சளாக இருந்தது. பிறகு மஞ்சள் குறைந்து வெளுப்பு...பிறகு வெளுப்பு மாறி நீலம்.... இரு நீல விழிகள், ஒரு முகம், ஒரு உடல், ஒரு, ஒரு.... அவள்!

''ஊ ஊ'' என்ற ஈனல் நாபியில் பிறந்து தொண்டைக்கு ஏறி, நாவைத் தாண்டி உதடுகளை அடைந்தபோது அங்கிருந்து வெளியே குதிக்க முடியாமல் அவளது உள்ளங்கையில் மோதிக் கொண்டு, ஒலியை இழந்து, காற்றுச் சிதறிற்று. உடல் உதறிக்கொண்டிருந்தது.

''என்ன ஆயிற்று? ஏன் இப்படி உங்கள் உடம்பு நடுங்குகிறது?''

நான் அகல விழித்துப் பார்த்தேன். அவள் உள்ளங்கையை என் வாயிலிருந்து எடுத்தாள்.

''ஏதாவது பயங்கரக் கனவோ?''

எனக்குச் சுரணை வருகிறாற் போலிருந்தது.

ஓ! கனவா? என்னால் நம்ப முடியவில்லை.

கனவில் என்னை விரட்டிய அதே விழிகளில் இப்பொழுது கனிவும், பரிவும், இரக்கமும் ஒருங்கே ததும்பின.

''தூக்கத்தில் உங்களையே நீங்கள் பிழிந்தெடுத்து, உடலை முறுக்கித் தவித்த தவிப்பைப் பார்த்து நான் நடுங்கி விட்டேன். பிறகு ஆண்டவனைக் கூப்பிட்டேன். அப்பொழுது ஆரம்பித்த பிரார்த்தனையை நீங்கள் கண் விழிக்கும் வரை நிறுத்தவே யில்லை...என்மேல் கோபமா? தயவு செய்து சொல்லுங்கள். உங்கள் மன்னிப்பைப் பெற்றுக் கொண்டு நான் போக வேண்டும்...''

நான் எழுந்து உட்கார முயன்றேன். அவள் உதவினாள். அப்பொழுது எங்களது முகங்கள் ஒரு மயிரிழையில் விலகி யிருந்தன. அந்நிலையில் விழிகள் சந்தித்தபோது, முன் இரவில் என்னை ஆட்கொண்ட மிருகம் என்னிடமிருந்து கழன்று, வாலைக் கால்களுக்கிடையில் சொருகிக் கொண்டு ஓடுவதை உணர்ந்தேன்.

என்னை உட்கார வைத்து விட்டு, 'வருகிறேன்' என்று கைப் பையை எடுத்துக் கொண்டாள். வேண்டாமென்று சொல்லவும் தைரியமில்லாமல், சரியென்று விடை தரவும் மனமில்லாமல், ஒரு கணம் தவித்தேன்.

அவள் கதவை நோக்கி நடக்க ஆரம்பித்தாள்.

பிறகு ஏதோ ஞாபகம் வந்தவளாய்த் திரும்பிப் பார்த்து, ''நீங்கள் ஒரு இந்தியர். காந்தியும், புத்தரும், பரமஹம்ஸரும், விவேகானந்தரும் வாழ்ந்த நாட்டிலிருந்து வந்திருக்கிறீர்கள்... என் முறையீட்டை.... இவ்வுலகத்து அப்பாவி மக்களின் முறையீட்டை' — சரியான முறையில் புரிந்து கொண்டு ஆவன செய்வதற்கு வேண்டிய யோக்கியதையும், பொறுப்பும், ஆத்ம பலமும் ஓர் இந்தியனிடத்தில்தான் இருக்க முடியும். அதை நினைவுபடுத்தவே உங்களிடம் வந்தேன். ஏதேதோ பிதற்றினேன். என் பேச்சில் ஒரு வெறி இருந்ததை நானே உணர்ந்தேன்...இருக்கட்டுமே! 'அணு யுகப் பைத்தியம் ஒன்று வந்தது' என்று உங்கள் டயரியில் குறித்து வைத்துக் கொள்ளுங்களேன்! என்ன?'' என்று வறண்ட குரலில் சிரித்தாள். அடுத்த நிமிஷம் அவள் அங்கில்லை.

அரை மணி நேரத்துக்கு ஒன்றுமே சிந்திக்க முடியாமல் ஒரே சூன்யமாக, பிரமை பிடித்தாற் போலிருந்தது.

பிறகு என்னை அறியாமல், என் கைகள் டயரியை எடுத்தன. நடுங்கும் விரல்கள், ''பைத்தியம்'' என்று எழுத ஆரம்பித்தன. எழுதி முடித்தவுடன், பிடிப்பில்லாமல் டயரி நழுவிக் கீழே விழுந்தது. அதை மீண்டும் கையிலெடுத்து எழுதியதைத் திரும்பப் படித்தபோது—

அது காயத்ரி என்றிருந்தது!

# கால்கேட் மூலம், வாய்-நாற்றத்தைத் தடுத்து நாள்முழுதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

COLGATE DENTAL CREAM SUPER SIZE



ஏனெனில்:
ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் க்ரீம் வாய்நாற்றத்தையும் பற்சிதைவை விளைவிக்கும் கிருமிகளையும் 85 சதவிகிதம் வரை அகற்றுகிறது.

கால்கேட் 10 க்கு 7 பேர்களில் வாய்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறதென்றும், உணவு உட்கொண்ட உடனேயே கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால் இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப்படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன! இந்த நிரூபணத்தைப் பெற்றிருப்பது கால்கேட் மட்டுமே!

அதன் விந்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையே தனி. கால்கேட் டென்டல்க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாது பல் துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இன் மூச்சோடு வெண்மையான பற்களும் பெறவே...மற்றெந்தப் பற்பசையையும்விட உலகிலே அதிக மக்கள் கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்.

5 வசதியான சைஸுகளில் கிடைக்கிறது!




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இப்பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத்பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பா பல மாதங்களுக்கு வரும்!

DC.G.37 TM

* காணுமற்போன முந்திரிப் பருப்புகள்.
* வர வரச் சேமியா பாயசம், கஞ்சி போலாகிறது!
* அமெரிக்க, ரஷ்ய வாய்த் திறனும் —
* இந்தியாவின் கைத்திறனும்.
* காசுக்கு எட்டு இனித் திரும் பிடாது...



சிறிது காலமாகவே பாயசம், லட்டு, சித்திரான்ன வகைகளாகிய தேங்காய், எலுமிச்சம்பழ அன்னங்கள் இவற்றில் பார்த்த மாத்திரத்திலேயே களிப்பூட்டி அதே சமயத்தில் நாவின் சுவைக்கும் ஒரு தூண்டுதலாக இருந்து வந்த முந்திரிப் பருப்புகள்



மறையத் தொடங்கி விட்டன! வீட்டில் இதைப் பற்றிக் கணவனோ ஏதாவது வாய் திறந்து கேட்டுவிட்டால், மனையாட்டியார் தனது கையில் உள்ள பெரிய எவர்சில்வர் கரண்டியைச் சுழற்றிக்கொண்டு பதிலுக்கு, ''அதைத்தான் நானும் கேட்-



கிறேன்..... கடையிலிருந்து வாங்கி வரும் முந்திரிப் பொட்டலங்கள். முன்னெல்லாம் பருமனாக இருந்து வருமே. இது சிறிது சிறிதாக இளைத்துக் கொண்டே வந்து, இப்போது அடியோடு மறையத் தொடங்கி விட்டதே! கடையில் ஏன் என்று விசாரியுங்கள். நானும் இரண்டு அக்கம் பக்கத்தில் இரவல் வாங்கி இன்று சேமியாப் பாயசத்தில் குழந்தை ராஜிக்காக வறுத்துப் போட்டு வைத்தேன். அந்த இரண்டையும் பாயசம் முழுதும் கரண்டி போட்டுத் தேடிப் பார்க்கிறேன், எங்கேயோ மாயமாகி விட்டிருக்கிறது! ஒருவேளை பாயசத்துக்குள் கரைந்திருக்கும். எதற்கும் கடையில் போய் விசாரியுங்கள். ஒரு ரூபாய் காஷ் பில் போட்டிருக்கிறதே...'' என்றார் மனையாட்டியார்.

கடைக்காரர் தமது பங்குக்கு முந்திரிமீது ஒரு பங்கு வசை புராணம் பாடி முடிக்கிறார்... ''கேளுங்க சார்! திடீரென்று ஒரே தூக்கலாகிப் பிடிக்க முடி-




யாத உயரத்துக்குத் தாவிற்று. இப்போது நாலு நாளா மூட்டைகளும் வரத்துக் கிடைப்பதாம்...!'' என்று தராசுத் தட்டுக்களை அசைத்துத் தாலாட்டுப் பாடத் தொடங்கி விடுகிறார்.

மொத்த வியாபாரியும் இதே பாட்டுத்தான். அவரை விட்டு, அரசாங்கத் தரப்பில், வர்த்தகத் துறையில் விசாரித்தால் அங்கேதான் என்ன ஆறுதலான பதில் வந்து விடுகிறது? ''முந்திரிப் பருப்பு பாயசத்தில் இல்லை என்பது உங்கள் குறை! ஆனால் பாயசமே பல இடங்களில் சர்க்கரை, பால் விலை உயர்வால் கிடையாதே!'' என்று கூறும் பொருளாதார நிபுணர்களைப் பற்றியோ கேட்க வேண்டியதில்லை!

சரி, முந்திரிக்குத் திரும்புவோம். உலக சேமியா பாயச வட்டாரங்களுக்கெல்லாம் இந்தக் கவலையை அதிகரிக்கக் கூடாதென்பதற்காக ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தைச் சேர்ந்த உணவு ஆராய்ச்சித் துறை

வெளியிட்டிருக்கும் ஓர் அறிக்கையில் இடியென்று முந்திரிக் கொட்டை வெடித்தாற்போன்ற ஒரு செய்தி இடம் பெற்றிருக்கிறது. அதன்படி, உலகத்திலேயே முந்திரிப் பருப்பை அதிகமாகப் புசித்து வரும் பெருமை இந்த நாள்வரை அமெரிக்க மக்களுக்கே உரியதாக இருந்து வந்ததாம். இப்போது சிறிது காலமாக ரஷ்யர்களும் தட்டுத் தட்டாக முந்திரிப் பருப்பைக் கொரிக்கத் தொடங்கியிருக்கிறார்களாம். குறிப்பாக எந்தச் சிறு அளவில் தேநீர் விருந்து நடந்தாலும் ரஷ்யர்கள் அதில் கலந்து கொள்ளும்போது பாகுடன் கலந்த முந்திரிப் பருப்பு உருண்டையை உடைத்து வாய் நிறைய அள்ளிப் போட்டுக் கொண்டு தின்கிறார்களாம். காக்டெயில் விருந்துகளிலும் இதே கதைதான். விருந்தின் இறுதியில் 'சாப்பிட்ட வாய்'க்கு என்பார்களே, அவ்வாறு தின்பதற்குக் கை நிறைய முந்திரிப் பருப்பைத் தட்டுகளில் அள்ளிப் போட்டுக் கொண்டு வந்து அமர்ந்து கொள்ளுகிறார்களாம். இவ்வாறாக முந்திரி வேட்டையில் முந்திக் கொண்டு வந்து உலகில் அமெரிக்கர்களுக்கு அடுத்தபடியாக உள்ள இடத்தை ரஷ்யர்கள் கைப்பற்றி யிருக்கிறார்கள் என்று கூறுகிறது அந்த அறிக்கை.



எந்த உலக ரிகார்டுகளிலும் விண்வெளிப் போட்டிகளிலும் அமெரிக்கர்களுடன் போட்டியிட்டு வரும் ரஷ்யர்கள், உலக உணவு மேஜையில் சேமியாப் பாயசத்தில் முந்திரிப் பருப்பைத் தேடும் இந்தியர்களுக்கு அருகிலேயே இடம் பெற்றுத் திருப்தி அடைவார்கள் என்று நாம் கருதவில்லை.

''போட்டி நல்லதுதான். அதன் மூலம் இந்நாட்டின் முந்திரி உற்பத்தியும் ஏற்றுமதியும் அதிகரிக்கும். அமெரிக்கர்களிடமிருந்து டாலர் கிடைப்பதுபோல ரஷ்யர்களிடமிருந்தும் இந்தியாவுக்குப் பொருட்கள் இறக்குமதியாக இது உதவும்'' என்கிறது அந்த அறிக்கை.

ஆனால் கூடவே ஓர் எச்சரிக்கையையும் அது விடுத்திருக்கிறது. ''இந்தியாவின் முந்திரி ஏற்றுமதிக்குப் போட்டியாகச் சில ஆப்பிரிக்க நாடுகளும், தென் அமெரிக்க நாடுகளும் கிளர்ச்சிபெற்று பெருகி வருகின்றன'' என்று கூறிவிட்டு, ''இதனால் இந்தியா கலங்கிடப் போவதில்லை. ஏனெனில் முந்திரிக் கொட்டையில் உள்ள பருப்பு உடைந்து விடாமல் முழுமையுடன் அதை உடைத்தெடுப்பதற்குத் தனித் திறமை வேண்டும். அது இந்தியாவில்தான் இருக்கிறது. இதனால் முந்திரி விளைவிக்கும் ஆப்பிரிக்க, அமெரிக்க நாடுகள் உற்பத்தியாகும் முந்திரிக் கொட்டைகளை உடைத்துத் தருவதற்குப் பெரும்பாலும் இந்தியாவுக்கே அவற்றை அனுப்பி வைத்து வருகின்றன. எனவே, இந்தியா கலைப்படத் தேவையில்லை'' என்கிறது அந்த அறிக்கை. முந்திரியை விள்ளாமல் விரியாமல் உடைத்தெடுக்கும் திறமை கொண்ட இந்தியக் கரங்களின் சாமர்த்தியம் உலகம் அறிந்ததாகும். 'காஷ்யூநட்' — இந்தப் பருப்புக்கு ஆங்கிலத்தில் நாமகரணம் செய்யப்பட்ட இடமே சென்னையாகும். கம்பெனி ஆட்சி காலத்தில், சென்னை கோட்டையருகே ஒரு கிழவி வறுத்த முந்திரிக் கொட்டைகளை விற்றுக் கொண்டிருந்தபோது, அங்கே வந்து சேர்ந்தான் ஓர் ஆங்கிலேயன். கொட்டைகளை உடைத்துப் பருப்பாக்கிக் கொண்டிருந்த கிழவியை நோக்கி, ''அம்மா, இதன் பெயர் என்ன?'' என்று கேட்டானும். அவன் கேட்பது விலையைத்தானுக்கும் என்று நினைத்த கிழவி, ''இது காசுக்கு எட்டு!'' என்று கூறினாளாம். அது முதல் காசுக்கு எட்டு-காசுக்கு எட்டு என்ற சொல்லே நீடித்து 'காஷ்யூநட்' என்று ஆங்கிலேயர்களிடம் இந்த முந்திரி பெயர் எடுத்துவிட்டது! காசுக்கு எட்டு அல்ல இப்போது அதன் விலை என்பதை மட்டில் முந்திரிப் பருப்பைச் சுவைத்துத் தின்னும் அமெரிக்க, சோவியத் அன்பர்கள் உணர்ந்து சற்றுக் கூடுதலாகவே விலை போட்டுக் கொடுக்கட்டும்.

அமெரிக்கர், ரஷ்யர்களிடம் நடக்கும் இந்த முந்திரிப் போட்டி எங்கு போய் முடியப் போகிறது? எந்தக் கிரகம் வரையில் போகப் போகிறது என்று மட்டும் கேட்க வேண்டாம். எங்கு வேண்டுமானாலும் இது போகட்டும். நமக்கு இன்றைய வறுமை நிலைமைக்கு வேண்டியது கலை கலையாக அந்நியச் செலாவணியன்றோ?

—வி. வி.



போலீஸ்காரன் மனைவி: ''இது என்னங்க அநியாயமா இருக்கே: இரண்டுபேர் சைக்கிளிலே போனாலே சட்டப்படி குற்றம் என்று சொல்லுவிங்க! இதை மட்டும் சும்மா பார்த்துண்டு இருக்கிங்களே, கைது செய்யுங்களேன்.''






Blue
Seal
TALC



ப்ளூ ஸீல் டால்க்
ஹெக்ஸக்ளோரோபின் கலந்தது.
சாதாரண பவுடர்களில்
இல்லாத தனி வலிமை
வாய்ந்தது.
அது வியர்வை
நாற்றத்திலிருந்து பாதுகாத்து
உங்களை நாள் முழுதும்
புத்துணர்ச்சியுடன்
இருக்கச் செய்கிறது.
ப்ளூ ஸீல் டால்க்கில் உள்ள வலிமைவாய்ந்த ஹெக்ஸக்ளோரோபின், வியர்வை நாற்றத்தை ஏற்படுத்தும் கிருமிகளிலிருந்துஉங்களை பாதுகாக்கிறது.
அதன் பட்டுப்போன்ற மென்மை, உங்களுக்கு புத்துணர்ச்சி யூட்டுகிறது. அதன் சிறப்பான இனிய மணம் உங்களை நாள் முழுவதும் நறுமணத்துடன் திகழச்செய்கிறது.
நினைவிருக்கட்டும். வியர்வை நாற்றத்திலிருந்து பாதுகாக்கவும், புத்துணர்ச்சி அளிக்கவும், ப்ளூ ஸீல் டால்கைவிட சிறந்த பவுடர் வேறெதுவுமில்லை
சீஸ்ப்ரோ பாண்ட்ஸ் இன்கார்பொரேட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ் ஏவில் இணைக்கப்பட்டது)





Blue
Seal
TALC





Blue
Seal



ப்ளூ ஸீல் டால்க் ஹெக்ஸக்ளோரோபின் கலந்தது.
சீஸ்ப்ரோ-பாண்ட்ஸின் இன்னொரு தரமான தயாரிப்பு !

இரண்டு வீடுகளுக்கும் இடையில் ஒரு சின்னஞ் சிறு சுவர்தான். மற்றொரு காம்பவுண்டுக்கு எதிரில் அந்த வீட்டின் ஒன்றில் தனது அலுவலகத்தை அமைத்திருந்தான் அமல். நல்ல ஒளியும் காற்றோட்டமும் கூடிய அந்த வீடு அவனுக்குத் தற்செயலாகத்தான் கிடைத்தது. மனித வர்க்கத்துக்கு இப்பொழுதெல்லாம் இயற்கை தரும் ஒளி வழி காட்டியாக இருப்பதில்லை. எனினும் அமல் போன்றதொரு ஓவியனுக்கு இயற்கை ஒளி இன்றியமையாதது. தனது படங்களை நன்கு வரைவதற்கு அவற்றில் கலை வண்ணம் மிளிர்வதற்கு ஒளி தேவைதானே? ஆனால் ஓவியன் அமல் இதைக் கருதி இந்த வீட்டைத் தெரிந்து அமர்த்தவில்லை. விதியில் நம்பிக்கையுடையவர்கள் இந்தக் கதையின் நாயகன் அமலுக்குக் காதல் தெய்வம் அளித்த வரப்பிரசாதம்தான் இந்த வீடு என்று நம்பலாம்.

அமல் ஒரு நல்ல ஓவியன்! ஆனால் கடின உழைப்பாளி அல்ல. காரணம் அவன் வாழ்ந்த கல்கத்தா நகரில் அவனை ஈர்ப்பதற்கு எத்தனையோ அம்சங்கள். ஒரு காலத்தில் அவன் மிகுந்த ஈடுபாட்டுடன் சிந்தனைக்கு வேலை கொடுத்துச் சிறந்த பல ஓவியங்களைத் தீட்டினான். புகழ் பரவியது. கலைஞனுக்குப் புகழ்தானே ஒரு சாபத்தீடு. புகழேணியின் உச்சிக்குக் கலைஞன் ஏற்றப்படும் பொழுது நிர்ப்பந்தம் நீங்குகிறது. புதிய புதிய எண்ணங்கள், கற்பனைகள், கனவுகள் எல்லாம் புகழில் மங்கி மறைகிறது. படைப்புக்கள் தானாகவே நின்று விடுகின்றன. அமல் மட்டும் இதற்கு விதிவிலக்காகிவிட முடியுமா? கல்கத்தா நகரின் பரபரப்பு அவனது சிந்தனை யோட்டத்துக்குத் தடையாக நின்றது. அவனுள் ஒரு மந்த உணர்ச்சி — மகிழ்ச்சியின்மை குடிகொண்டது.

புகழும், பணமும், செல்வமும் செல்வாக்கும் மனிதனுக்கு வரலாம் — போகலாம்; ஆனால் மனிதனோடு நீங்காத உறவு கொண்டது உணவும், பசியும். அமலுக்கு மகிழ்ச்சியில்லை. ஆக்க பூர்வமாக எந்த வேலையையும் அவனால் செய்வதற்கான தெம்பும் திராணியும் இல்லை. தன்னுடைய பையில் பணமில்லை என்பதை அமல் உணர்ந்தான். 'வறுமையின் நெருங்கிய நண்பன் ஓவியன் என்பதை அமல் அறிவான். தன்னை வறுமை ஆட்கொள்ள வருகிறது என்று தெரிந்த மறுகணமே அமல் அமைதியான சூழலை நோக்கிப் புறப்படத் தீர்மானித்தான். அடுத்த குளிர் காலத்தில் நடைபெறும் கண்காட்சிக்குச் சில ஓவியங்களைத் தீட்ட முடிவு செய்தான். நகரப்புறத்திலிருந்து விலகி 'கிர்டி' கிராமத்துக்கு விரைந்தான். மேலே குறிப்பிட்ட





# உடைந்த பெட்டி!

மூலம்: சசீந்த்ர மஜும்தார்
தமிழில்: நெல்லை. எஸ். வேலாயுதம்

சின்னஞ் சிறு வீட்டை அமர்த்தினான். பணியைத் தொடங்கினான்.

ஆரம்பத்தில் அவன் தீட்டிய ஓவியங்கள் அவனுக்குத் திருப்தியைத் தரவில்லை. இப்பொழுது ஒரு நல்ல ஓவியம்

வந்துவிட்டது. முன்னேற்ற சதி தென்பட்டது. ஓவியர்களுக்கு ஏற்படும் மனோநிலை பல சமயங்களில் அவர்களது பணிக்குக் குந்தகமாக இருக்கும். ஆனால் அமலுக்கு அந்த நிலை கிடையாது. இயந்திர கதியில் படங்களை வரைந்து தள்ளுவான். அவை உலகப் புகழ் ஓவியங்களாக மலராமல் போனாலும் விற்பனைப் படங்களாக இருக்கும்.

இயற்கையின் எழிலைப் பார்த்து ரசிக்கும் வண்ண ஓவியமாகத்



தீட்ட விழைந்த அமல் மலையடிவாரத்தில், காட்டுப் பாதையில், நதிகள் ஓடும் பகுதிகளில் சுற்றி அலைந்தான். இயற்கையின் எழிலை, தெய்வீகக் கலையை அவன் ரசித்து அப்படியே வண்ண வண்ண ஓவியங்களாகத் தீட்டும்படியாக அவற்றைப் பார்க்கவில்லை. ஒரு சர்வேயரைப் போலவே அவன் அவற்றைப் பார்த்தான். அவ்வாறே வரை படங்கள் போன்று ஓவியங்களைத் தீட்டினான்.

ஒரு நாள் காலை அமலின் கண்கள் அண்டை வீட்டுச் சன்னலை நோக்கியது. காலைக் கதிரவன் தன் ஒளிக் கதிர்களை வீசினான். அந்த ஒளி துயிலெழுந்த மனிதனுக்கு தெம்பூட்டியது. அமலும் உற்சாகமடைந்தான். மறு கணம் தான் வரைந்திருந்த மாதிரிப் படத்தை நோக்கினான். உற்சாக மிகுதியால் வைத்த கண் வாங்காமல் தன் ஓவியத்துக்குத் தேவையானவை அனைத்தையும் அங்குலம் அங்குலமாக மனத் திரையில் வரைந்தான். அடுத்து எழுதுகோலை எடுத்து பணியைத் தொடங்கினான்.

அவனது மாதிரிப் படம் அடுத்த அறையில் தனது மேஜையின் முன் அமர்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருக்கும் ஓர் இள நங்கை தான். அவள் ஓர் அழகி. மேஜையின் முன் அமர்ந்து எழுதும் சாயல் அவளை ஒரு பேரழகியெனக் காட்டியது. அவளது கூந்தலின் மென்மையான ஒருசில உரோமங்கள் கதிரவன் ஒளியில் தங்கமென ஜ்வலித்தன. சன்னல் வழியாக வரும் காற்றில் அவை அசைந்தாடுவது கண்கொள்ளாக் காட்சி! தங்க நிற மேனியாளின் தளிர் மேனியில் காலைக் கதிரவனின் ஒளி வீச்க. ஆகா! அற்புதம்! அற்புதம்! அமலின் ஓவியம் முன்னேறத் தொடங்கியது. அவனது ஓவியம் — அழகுத் தேவதையா — அப்ஸரஸா அல்லது அறிவொளி வீசும் சரஸ்வதி தேவிதான் அந்த அறைக்குள் வந்து காட்சி தருகிறாளா? என்றவாறு அமைந்தது.

ஒவ்வொரு நாள் காலையிலும் அமல் ஓவியத்தை முன்வைத்து மேலும் மேலும் அதைச் செழுமைப்படுத்தும் பணியில் முனைந்தான். அடுத்த வீட்டு அழகியை அவனது வண்ண ஓவியத்துக்கு மாதிரியாகக் கொண்டான்.

ஓவியம் வேகமாக உருவம் பெற்றது. ஒரு நாள் காலை ஓவியம் முழுமை யடைந்தது. உயிருள்ள எழிலரசியை விட அவளைக் கொண்டு அமல் வரைந்த ஓவியம் பேரெழிலுடன் விளங்கியது. அத்துணை அழகாக அவன் வண்ணம் தீட்டியிருந்தான். முகம். அப்பப்பா! என்ன அழகு! என்ன அழகு! பார்த்தால் பசி தீரும். மிகவும் பிரமாதமாக வரைந்திருந்தான். நீல விழிகளும், புருவ வளைவுகளும் மிகுந்த கவனிப்புடன் ஆழமான உணர்வை மையமாகக் கொண்டு தீட்டப்பட்டிருந்தன. அமல் மகிழ்ச்சிப் பெருக்கால் துள்ளினான். அவனுக்கே அவனது திறமையில் நம்பிக்கை யில்லை. அத்துணை அற்புதமாக அமைந்து விட்டது அந்தப் பேரழகுப் பிம்பம். எந்தக் கண்காட்சியிலும் அந்த ஓவியம் ஏராளமான பரிசைத் தட்டிக் கொண்டு போகும் என்பதில் சந்தேகமில்லை.

ஆனால் அவன் அந்த ஓவியத்தை விலை கூறலாமா? அதை விற்பதற்கு அவனுக்கு உரிமை இருக்கிறதா? அவனுள் கேள்விக் குறிகள் தோன்றின. வண்ண ஓவியத்தை ஓவியத்துக்குரியவளுக்கே பரிசாகத் தந்து விட்டால்? நல்ல சிந்தனைதான். எப்போது, எப்படி அவளிடம் பரிசை அளிப்பது? இப்போதைக்குத் தனது பள்ளியறையில் அந்தப் பேரழகுப் பிம்பத்தைக் கொண்டு வைத்திருந்தான்.

யாருடைய பாதுகாப்புமின்றி இருந்த அந்தப் பேரழகியிடம் தன் வசமிழந்த அமல் எப்படியாவது பேசிப் பழகத் துடித்தான். ஆனால் வாய்ப்புக் கிட்டவில்லை. அவர்கள் சந்திக்க வேண்டுமென்பது கடவுளின் விருப்பம் போலும்.

ஒரு நாள் மாலை தென்றல் வீசியது. கிறிஸ்தவ மலை என்றழைக்கப்படும் அந்தக் கிராமத்தின் சரளைக் கற்கள் நிறைந்த சாலையின் கடைசிப் பகுதியில் காற்று வாங்குவதற்காகச் சென்றான் அமல். திரும்பும்போது மரங்களும் புதர்களுமுள்ள பகுதியில் வழக்கம் போல் சிறிது நேரம் நின்று அவற்றின் அழகை ரசித்துக் கொண்டிருந்தான். சிறிது தூரத்தில் நாய்கள் குரைக்கும் சத்தம் கேட்டுத் திரும்பினான். அவை குரைப்பதற்கான காரணத்தை ஆராயு முன் சிவப்பு நிறச் சேலையொன்று முட்களில் சிக்கிக் கொண்டிருப்பது அவனுக்குத் தெரிந்தது. விரைந்து வந்த அமல் நாய்களை விரட்டினான். மரத்துக்குப் பின்னாலிருந்து அடுத்த வீட்டு அழகி பயமும் பீதியும் குடிகொள்ள நடுங்கியவாறு வந்தாள்.

"வழக்கமாக வருவேன். ஒரு நாளும் இப்படிப் பயந்ததில்லை" என்றாள்.

அமல் தன்னுள் மகிழ்ச்சிக் கடலில் நீந்தினான். அவன் எதிர்பார்த்து ஏங்கிக் கிடந்த வாய்ப்புக் கிட்டிவிட்டது. அவளை நேருக்கு நேர் பார்த்து விட்டான். புன்முறுவலுடன், அவளுடைய செந்நிறச் சேலையைக் காட்டி "சிவப்பு நிறம் அபாயத்தை அறிவிக்கும் நிறமல்லவா? எனவேதான் நாய்கள் பயந்துவிட்டன" என்றான்.

ஆட்கொண்டிருந்த பயம் அவளை விட்டு அகன்றது. சிரித்தாள். அவளுக்கு இலேசாகச் 'சோகை' உண்டு என்பது அமலுக்குத் தெரியும். கொஞ்சம் சோகை இருந்தால் அழகான பெண்கள் மேலும் அழகாகத் தோற்றமளிப்பார்கள். அவளது கண்களைச் சுற்றி நீல நிற வளையங்கள் தோன்றின. அவளது கடினமான இலக்கியப் பணியின் காரணமாக இயற்கைக் காற்று இல்லாமல் அவள் வெளுத்திருந்தாள்.

அவர்கள் இருவரும் வீடு திரும்பும்போது தன்னை அவன் அண்டை வீட்டுக்காரர்—ஓவியர் என்றெல்லாம் தெரிந்து கொண்டிருக்கிறாள் என்பதை அறியப் பெருமகிழ்ச்சியடைந்தான். அடுத்துச் சில நாட்கள் அவர்கள் இருவரும் அருகில் உள்ள வயல் வெளி, ஆற்றங்கரை போன்றவிடங்களில், மாலை நேரங்களில் சந்திப்பதும் அதைத் தொடர்ந்து கொஞ்சம் நடந்து செல்வதுமாகக் கழிந்தது. சீக்கிரமே இந்நிலை மாறி மாலை நேரங்களில் ஒருவரை யொருவர் அழைத்துச் செல்லும் நிலை ஏற்பட்டது.

படிப்படியாக மீரா அவனிடம் மனம் திறந்து பேசினாள். தான் ஒரு பள்ளி ஆசிரியை என்றும், ஆனால் ஆசிரியப் பணியில் தனக்கு உற்சாகமில்லை என்றும் கூறினாள். தான் ஒரு சிறந்த கதாசிரியையாக வேண்டும் என்ற லட்சியத்தையும் வெளியிட்டாள். ஏற்கனவே அவள் ஒரு நூல் எழுதி வெளியிட்டிருக்கிறாள். ஆனால் அது ஒரு சிறந்த நூலாக ஏற்கப்படவில்லை. முதல் முயற்சி எல்லோருக்குமா வெற்றியைத் தந்து விடுகிறது? எனவே அவளும் தனது இரண்டாவது நூலை எழுதுகிறாள். தனது நீண்ட விடுமுறையை அமைதி குடிகொண்டிருக்கும் அக்கிராமத்திலிருந்து இம் முயற்சிக்காக ஒதுக்கி யிருக்கிறாள். அவர்கள் இருவரும் பல நூல்களைப் பற்றியும் படங்களைப் பற்றியும் பேசினார்கள். ஆனால் இத்தகைய பேச்சுக்களில் ஒருவரை யொருவர் ஈர்க்கப் பட்டதாக ஒருவரும் புரிந்துகொள்ளவில்லை. மீராவின் முதல் நூலான 'கடந்த காலங்கள்' என்பதைப் படித்து அதில் பல நல்ல அம்சங்கள் இருப்பதாக அமல் நினைத்தான்.

அமலுக்கு யோகம் என்றுதான் சொல்ல வேண்டும். சீதோஷ்ண நிலை மாற்றத்தால் அமலுக்கு ஒரு நாள் ஜலதோஷம் பிடித்து விட்டது. வெளியே போக முடியாத நிலை. மீரா அவனைப் பார்ப்பதற்காக வந்தாள். அவனது பள்ளியறைக்குள் நுழைந்ததும் தன்னுடைய பிறந்தமேனி பிம்பத்தை — அழகு ஓவியத்தைப் பார்த்தாள். ஆச்சரியமடைந்தாள். வெட்கம் அவளை ஆட்கொண்டது. அவளது உடம்பில் சூடேறியது.

ஆத்திரத்துடன் அவனைப் பார்த்த மீரா, "இது இயற்கையானது அல்ல. ஏன் இவ்வாறு செய்தீர்கள்?" எனக்கேட்டாள். அவளது குரல் தழுதழுத்தது. கோபத்துடன் வேகமாகத் தன் வீட்டுக்குச் சென்றாள்.

தன்மீது கோபம் கொண்டுள்ள தனது காதலியின் அன்பைப் பெற என்ன செய்யலாம் என்று தீவிரமாகச் சிந்திக்கலானான் அமல். நீண்ட நேரம் யோசனையில் ஆழ்ந்தான். இரவில் அவனுள் ஒரு சதித் திட்டம் உருவாகியது. தனது கணக்குகளைப் பார்த்தான். மழைக் காலத்துக்காக ஒதுக்கி வைத்திருந்த பணம் ரூபாய் இரண்டாயிரம் மட்டும் இருந்தது. காதல் தெய்வம் கதவைத் தட்டும் போது மழைக்காலமாவது! வெய்யில் காலமாவது! மறுநாள் காலையில் உள்ளூரில் உள்ள புத்தகக் கடைக்குச் சென்று அங்கிருந்த 'கடந்த காலங்கள்' நூலனைத்தையும் வாங்கினான். மேலும் பல பிரதிகள் தேவையெனக் கூறி அந்த நூல் கிடைக்கும் இடங்களை விசாரித்து, கல்கத்தா மற்றும் ஊர்களிலுள்ள புத்தகக் கடைகளுக்கும் ஆர்டர் கொடுத்தான்.

ஒரு வாரத்தில் அமலின் வீடு நோக்கிப் புத்தகக் கட்டுகள் வந்த வண்ணமாயிருந்தன. ஆரம்ப உற்சாகத்தில் புத்தகக் கட்டுக்களை என்ன செய்வது என்பது பற்றி அமல் யோசிக்கவில்லை. இப்போதோ அவை அவனுக்கு ஒரு பிரச்னையாகி விட்டன. அவனது சின்னஞ் சிறு வீட்டை இப்பொழுது ஏராளமான பெட்டிகள் அடைத்தன. அவை அனைத்தையும் அமல் பூட்டி வைத்திரு

தான். மீராவைத் தன் வசமாக்குவதற்குள் அவற்றை அவள் பார்த்து விடக் கூடாதல்லவா? புத்தகங்களை என்ன செய்வதென்பது பற்றி அமல் யோசித்தான். ஒரு வழியும் தெரியாமல் குழம்பினான். திடீரென்று அவனது நினைவில் தன் வீட்டுக்குச் சற்றுத் தூரத்தில் உள்ள வயலில் உள்ள கிணறு தோன்றியது. உடனே அவனது முகம் மலர்ந்தது.

அன்று இரவு. யாரும் வெளியே வராத நேரம். கிராமத்தில் மயான அமைதி குடிகொண்டிருந்தது. ஒரு பெரிய பெட்டியுடன் கிணற்றருகே வந்தான் அமல். சுற்று முற்றும் பார்த்து விட்டுக் கிணற்றுக்குள் பெட்டியைப் போட்டான். அவனது கழுத்தும், தோள் பட்டைகளும் சுமையின் காரணமாக வலித்தன. வலி தாளாத அமல் புத்தகங்கள் இவ்வளவு கனமானவை என்பதை இப்பொழுதுதான் உணர்ந்தான். ஆனால் அவனது உள்ளம் பாதிச் சுமையைக் குறைத்தது. தினசரி ஒன்று அல்லது இரண்டு பெட்டிகள் கிணற்றுக்குள் தள்ளப்படும். ஆனால் ஒவ்வொரு நாளும் ஒரு புதிய பெட்டி வந்து சேரும். அவை வீட்டில் தேங்கத் தேங்க அமலின் உள்ளம் படாத பாடு படும். மீரா கண்டு பிடித்து விட்டால்?

மீராவின் ஒவ்வொரு அசைவையும் அவன் கவனித்தான். தன் வீட்டுக்கு அவள் வராத வண்ணம் அவனே மீராவின் வீடு சென்று பார்த்துக்கொள்வான். பகல் நேரத்தில் மீரா வந்து விடக் கூடாதென்பதற்காக வீட்டைப் பூட்டி விட்டு எங்காவது போய்விடுவான். மீராவிடம் ஏதாவது பொய் சொல்வான். அவனது காதல் பாதை கரடு முரடாக இருந்தது.

ஒரு நாள் மாலை பைத்தியம் பிடித்தவள் போல் மீரா அமலிடம் ஓடோடி வந்தாள். அவளது முகம் மகிழ்ச்சியால் உப்பிக் காணப்பட்டது. அவளது நூலை வெளியிட்ட பதிப்பகத்தாரிடமிருந்து வந்த தந்தி அவள் கையிலிருந்தது. அவளது நூல்கள் அனைத்தும் விற்று விட்டன. இரண்டாம் பதிப்பை வெளியிடுவதற்காகவும் அவள் எழுதிக்கொண்டிருக்கும் அடுத்த நூலைப் பிரசுரிப்பதற்காகவும் பிரசுரகர்த்தா அவளை உடனடியாகப் பார்க்க விரும்பினார். அமல் அவளைப் பாராட்டினான். இருவரும் உடனே ரயில் நிலையம் சென்றனர். அன்று இரவே கல்கத்தா புறப்படுவதாகப் பிரசுரகர்த்தாவுக்குத் தந்தி மூலம் தெரிவிக்கவே சென்றனர். தனது நாடகத்தின் 'கிளைமாக்ஸ்' நெருங்கி வருவதை உணர்ந்த அமல் மீரா வெளியூர் போயிருக்கும் அந்த இரண்டு இரவுகளிலும் எத்தனை பெட்டிகளைத் தள்ள முடியுமோ, அத்தனை பெட்டிகளையும் கிணற்றுக்குள் தள்ளினான். எனினும் கூட இன்னும் சில பெட்டிகள் இருந்தன. எத்தனை பிரதிகள் தான் அச்சிட்டுத் தள்ளியிருக்கிறான். தொந்தரவு வேறு. அமல் பிரசுரகர்த்தாவைச் சபித்தான்.

மீரா மகிழ்ச்சி பொங்க ஊர் திரும்பினாள். ஏற்கனவே அவள் ஓர் அழகி. இப்போது பேரழகியாகத் திகழ்ந்தாள். 'வெற்றி' என்னும் மது பானத்தை அவள் முதல் முறையாக அருந்தியிருக்கிறாள். தான் ஒரு சிறந்த கதாசிரியை என்ற போதையை மது ஏற்றி விட்டது. மீரா பரபரப்புடன் காணப்பட்டாள். பிரசுரகர்த்தா மீராவுக்கு முதல் 'ராயல்டி' பணத்தை வழங்கினார். மேலும் அவளுக்குச் சன்மானத்தை அதிகரித்து இரண்டாவது பதிப்புக்காகவும் கையிலிருக்கும் அடுத்த கதைக்காகவும் கணிசமான தொகையை முன் பணமாகக் கொடுத்தார். மீராவுக்குப் பணம் அவ்வளவு பெரிதாகப் படவில்லை. அதை விட அந்த ஆண்டின் வெற்றிகரமான புத்தகம் அவள் எழுதிய 'கடந்த காலங்கள்' என்பதுவும் ஒரே மாதத்தில் அத்தனை புத்தகங்களும் விற்றுத் தீர்ந்து விட்டன என்பதும்தான் பெரிய விஷயம். மீராவின் வெற்றிக்காகப் பெரும் இழப்புக்குள்ளான அமல் அவளது மகிழ்ச்சியைப் பங்கிட்டுக் கொண்டான். இருந்தும் எஞ்சியுள்ள பெட்டிகள் அவனுள் எரிச்சலைக் கொடுத்தன.

அவன் நடத்திய நாடகத்தின் கிளைமாக்ஸ் கட்டம் வெகு விரைவில் — இரண்டே நாட்களில் வந்து விட்டது. அன்று இரவு. கிணற்றுள் அமல் ஒரு புத்தகப் பையைப் போட்டு விட்டுத் திரும்பினான். அங்கு நின்று கொண்டிருந்த போலீஸ்காரனின் கையில் அகப்பட்டுக் கொண்டான். அமல் பயத்தினால் வெல வெலத்துப் போனான். போலீஸ்காரனிடம் எதை எதையோ உளறினான். போலீஸ்காரன் அவனது கதைகளை நம்பத் தயாராயில்லை. ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்றான்.

இரண்டு நாட்களாகச் சந்தேகத்துக்கிடமான சில பெட்டிகளை அமல் கிணற்றில் தள்ளியதாகவும், அவனது குற்றத்தை நன்கு ஊர்ஜிதப்படுத்திக் கொள்வதற்காகவே இரண்டாம் நாள் அவனைப் பிடித்து வந்திருப்பதாகவும் போலீஸ்காரன் இன்ஸ்பெக்டரிடம் கூறினான். அமல் நடந்த கதையை ஒளிவு மறைவின்றி இன்ஸ்பெக்டரிடம் கூறினான். அவனது திட்டம் பற்றிக் கேட்ட அந்த இளம் போலீஸ் இன்ஸ்பெக்டரின் முகம் மலர்ந்தது. அமல் பேசி முடித்ததும் அவர் உரக்கச் சிரித்தார். அமலை விடுவித்து வீடு செல்ல அனுமதித்தார்.

''உன்னுடைய கதை உண்மை என்று நாளைய தினம் நிரூபிக்கப்பட்டால் உனக்கு ஒரு தொந்தரவும் தரமாட்டோம். ஆனால் இன்று இரவு போலீஸ்காரர் உன்னைக் கண்காணிப்பார். அதைப் பற்றி நீ தவறாகக் கொள்ள வேண்டாம். அது எங்கள் கடமை. அவ்வளவுதான்.'' இவ்வாறு கூறினார் போலீஸ் இன்ஸ்பெக்டர்.

''அது சரி. ஆனால் என் வீட்டில் இன்னும் இரண்டு பெட்டிகள் உள்ளன. மீரா அவற்றைப் பார்த்துவிடக் கூடாது. எனவே, என்னுடைய திட்டம் தவிடுபொடியாகா வண்ணம் அமைதியாகச் சோதனை செய்யுங்கள்'' என்று மன்றாடினான் அமல்.

''ஒரு மனிதனின் காதல் வெற்றி யடைவதற்காக அவன் செய்யும் காரியங்களுக்காக அவனைக் கைது செய்ய மாட்டோம். நீ கூறியவை உண்மை என்றால், என்னாலான

உதவிகளனைத்தும் செய்வேன்'' என்று சிரித்தவாறே கூறினார் போலீஸ் இன்ஸ்பெக்டர்.

இருவரும் நல்ல நண்பர்களாகப் பிரிந்தனர்.

**ம**று நாள் காலை. அமலின் செய்கை அளவுக்கு மீறிய காதல் போதையில் செய்யப்பட்ட பைத்தியக்காரத்தனமான செய்கை தான் என்பதைப் போலீஸ் இன்ஸ்பெக்டர் தேர்ந்து தெளிந்தார். அமல் கொடுத்த தேநீரை அருந்திவிட்டு, ''எஞ்சியுள்ள இரண்டு பெட்டிகளையும் இன்று இரவு நீ கிணற்றில் தள்ளலாம். உன் காரியம் வெற்றி பெற வாழ்த்துகிறேன்'' என்று கூறிச் போலீஸ் இன்ஸ்பெக்டர் சென்றார்.

அன்று பகல் நேரத்தில் மீரா எதிர் பாராத விதமாக ஓர் அஞ்சல் தலைக்காக அமலின் வீட்டுக்கு வந்தாள். முன் கதவு தாளிடப்படவில்லை. உடைந்த பெட்டியிலிருந்து சிதறி எழுந்த சில புத்தகங்களைக் கட்டுவதில் அமல் சுறுசுறுப்பாக இருந்தான். மீரா அந்தக் காட்சியைப் பார்த்து விட்டாள். தன்னுடைய 'கடந்த காலங்கள்' புத்தகங்கள் சிதறிக் கிடந்தன. உடைந்த பெட்டியைப் போன்று மற்றொரு பெட்டியும் அங்கிருந்தது. அவள் புரிந்து கொண்டாள். தனது புத்தகங்கள் அவ்வளவு சீக்கிரம் விற்பனையான மர்மத்தை அவள் உணர்ந்து விட்டாள்.

''ஒரு சாதாரணப் பெண்ணுன எனக்காக நீங்கள் ஏன் இக்காரியத்தைச் செய்ய வேண்டும்?'' எனக் கேட்டாள். அவனது முகம் வெளுத்து விட்டது. அமல் அவளது கைகளைப் பற்றி நாற்காலியில் அமரச் செய்தான். ஒன்றும் மறைக்காமல் உண்மையைக் கூறினான். மீரா உணர்ச்சி வசப்பட்டாள். அவளது கண்களில் நீர் மல்கின. அவன் கதையைக் கூறும் போது அவளது முகம் மலர்ந்தது; கன்றிச் சிவந்தது.

கதை முடிந்தது. ''நான் சொல்ல வேண்டியது இவ்வளவுதான்'' என்று கூறிய அமல் மீராவின் கைகளைப் பிடித்துக் கொண்டு, ''உன்னுடைய முடிவு எதுவானாலும் சரி. உன்னுடைய எழிலோவியத்தைத் தொடங்கியதிலிருந்து நான் உன்னிடம் என்னைத் தந்து விட்டேன்'' என உணர்ச்சி பொங்கக் கூறினான் அமல்.

ஒரு வாரத்தில் மீரா அவனுடையவளாகி விட்டாள்.

# வட்டமேஜை

**பு**துமுக வகுப்பில் சில பிரிவுகளில் கலைப் பாடங்கள் (Arts Subjects) தமிழில் சில ஆண்டுகளாக நடைபெற்று வருகின்றன. பி. ஏ.யிலும் தமிழ் போதனு மொழியாகிச் சில ஆண்டுகளாகின்றன. இருந்தும் மாணவரிடையே தமிழ் மூலம் பயிற்சியில் அவ்வளவாக ஆதரவில்லை. பட்டம் வாங்க மட்டுமே படிப்பவர்களுக்கு இது நன்மை தரலாம். பட்டத்தால் வேலை என்ற பயனையும், அதன் பயனுன ஊதியத்தையும் எதிர் பார்ப்போருக்கு இது எவ்வளவு தூரம் பயன் தரும்? நமது மாநிலத்தில் படித்துப் பட்டம் பெற்றவர்கள் பிற மாநிலங்களுக்கு வேலை வாய்ப்புக் கருதிச் செல்லும் வழி இருக்கும் இந்த நாளிலேயே தமிழகத்தில் வேலைப் பஞ்சமும், திண்டாட்டமும் உண்டு. இந்நிலையில் பிற மாநிலங்களில் வேலை தேடிச் செல்ல முடியாத நிலையை ஏற்படுத்தி விட்டால்....? போதாக் குறைக்கு அறிவியல் துறையினையும் தமிழாக்க அடுத்த ஆண்டில் ஆரம்பிக்கப் போவதாக ஒரு செய்தி....

காரைக்குடி — 3
11—6—69 ரா.நாக. சேது சுப்பிரமணியன்

**க**டந்த ஆண்டு சந்தாத் தொகையை அனுப்பி, ''பிரபல நட்சத்திரம்'' என்னும் சிறுகதைத் தொகுப்பைப் பெற்றேன். இவ்வாண்டு பிளாஸ்டிக் மேலுறை அன்பளிப்பைப் பெற்றேன். மிக்க நன்றி. அட்டையில் விநாயகப் பெருமானின் திருஉருவத்தைக் காணும்போது ஒரு தெய்வீக மணம் கமழ்கிறது. கதைப் புத்தகம் என்ற நினைப்புக்கும் மேல் மனத்தில் ஒரு திருப்தியும், கையில் எடுக்கும்போது பெருமையும் ஏற்படுகிறது. மீண்டும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தூத்துக்குடி — 2
13—6—69 க. ஞானலி

**வ**ணக்கம் பல. ''கல்கி'' 22-6-69 இதழில் ''ஸ்ரீ ஸ்கந்த சஷ்டி'' என்ற தலைப்புடன் பிரசுரித்துள்ள. சிறப்புச் சிறுகதையை நானும் என் குடும்பத்தாரும் படித்தோம். மிக்க மகிழ்ச்சியுற்றோம். ''சிறப்பு'' என்ற அடைமொழிக்குரிய அம்சங்கள் பல அக்கதையில் அடங்கியுள்ளன என்பதை ''கல்கி'' வாசகர்கள் அனைவரும் ஒப்புக் கொள்வர் என்பதில் ஐயமில்லை.

''ஸ்கந்த சஷ்டி'' போன்ற தெய்வ பக்தி ஊட்டும் உருக்கமான சிறு கதைகள், ''ஞான ஒளி'' போன்ற நாடகத் தொடர்கள் ஆகியவை கடவுள் நம்பிக்கையைத் தளராது வாழையடி வாழையாகப் பரவச் செய்ய மிகவும் உதவும். ஆஸ்திகத்தைச் ''செல்லும் வாயில்கள்'' அனைத்தின் மூலமாகப் பரப்புவதில் ஆர்வம் கொண்ட கல்கியைப் பொது மக்கள் மனமாரப் போற்றி வருகிறார்கள்.

சென்னை-15 டி.எஸ். நாராயணஸ்வாமியும்
19—6—69 குடும்பத்தாரும்

---

**Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31**
**Managing Editor: T. Sadasivam**

# GRASIM

## STAPLE FIBRE A SUPPLEMENT TO COTTON AND OTHER FIBRES



**Among Indian technological achievements Gwalior Rayon's success in producing Rayon Grade Pulp from indigenous raw materials without any foreign aid or collaboration has, perhaps, been the most remarkable.** The staple fibre produced from the pulp has been a boon to the hard-pressed textile industry which was deprived of valuable raw materials when vast areas of cotton-growing land were lost to Pakistan as a result of Partition.

Grasim Staple Fibre is unique in many respects, and is, in effect, a supplement to all natural fibres including cotton, wool, silk, jute, as well as to synthetic fibres. When blended or mixed with other fibres, it increases the usefulness of the resultant fabrics, making them cooler, softer, and more comfortable while at the same time helping to lower costs.

Today Gwalior Rayon contributes substantially to the national economy. It keeps hundreds of textile mills busy, gives employment to thousands of people, helps clothe lakhs more, saves crores of rupees in foreign exchange, contributes handsomely and in ever-increasing amounts to the national exchequer—these are just a few of the calculable benefits.

Besides Rayon Grade Pulp and Staple Fibre, Gwalior Rayon also produces high quality fabrics and fabricates its own machinery and equipment.

As the needs of the nation for the basic necessities of life are constantly growing, Gwalior Rayon, conscious of its responsibilities, has already made plans to expand its production. It is the constant endeavour of the Company to serve the country to its utmost ability.

**THE GWALIOR RAYON SILK MANUFACTURING (WVG.) CO. LTD.**

Birlagram, Nagda.

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இந்தக் கணம் சிதைவை
எதிர்த்துப் போரிடுகிறதா
உங்கள் பற்பசை ?

# ஸிக்னல் 24 மணி நேரமும் உங்கள் பற்களைப் பாதுகாக்கிறது



**சிதைவுக்குக் காரணமான கிருமிகளை ஒழிக்கும் ஹெக்ஸாக்ளோரபீன் இருக்கிறது ஸிக்னலின் செவ்வரிகளிலே.**

பிரஷ்ஷுக்கு எட்டாத இடம் எங்கும் எட்டி, சிதைவுக் கிருமிகளை வேட்டையாடுகிறது ஸிக்னல். அதன் நுரையின் செயல்வேகம்...வாய்மலரும் தூய்மை. அதோடல்ல. துலக்கி நெடுநேரம் ஆனபின்னரும் உங்கள் வாய்நலனைக் காத்துநிற்கும். இவ்வளவு செய்ய இயலுமோ சாமானியப் பற்பசைகளால்?




லின்டாஸ் - SG. 22-140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு